# மதுரை மாவட்டத்
# தொல்லியல் கையேடு




பதிப்பாசிரியர்

**தி.ஸ்ரீ. ஸ்ரீதர்,** இ.ஆ.ப.

*சிறப்பு ஆணையர்*

*உதவி பதிப்பாசிரியர்கள்*

பொ. இராசேந்திரன்

முனைவர் வெ. வேதாசலம்

முனைவர் செ. சாந்தலிங்கம்



வெளியீடு

**தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை**

**2005**

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | **Madurai Mavatta Tholliyal Kaiyedu** |
| Editor | : | Spl. Commissinor |
| Copy Right | : | T.N. State Dept. of Archaeology |
| Subject | : | History |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Publication No. | : | 171 |
| Year | : | 2005 |
| Type Point | : | 11 |
| No.of. Pages | : | 244 |
| Paper Used | : | 80 Gsm Maplitho |
| Type Setter | : | **Cavin Laser Printers** 19/9, Devaraja St, Trip licane, Chennai - 5 Cell: 9841253886 |
| Printer | : | **TAMCOS,** Royapettah, Chennai - 600 014. |
| Publisher | : | **State Dept. of Archaeology,** Tamil Valarchi Valagam, Halls Road, Egmore, Chennai - 600 008. |
| Price | : | **Rs. 57/-** |




# பதிப்புரை

'தமிழ் நிலை பெற்ற தாங்கரு மரபின்
மகிழ் நனை மறுவின் மதுரை' (சிறுபாண்: 66 –67)

என சங்கப் பாடலில் பெருமையோடு பேசப்படும் நகரம் மதுரை.

'கட்டுக் கலங்காணும் கதிர் உழக்கு நெல்காணும்
அரிதாள் அறுத்துவர மறுநாள் பயிராகும்
அரிதாளின் கீழாக ஐங்கலத் தேன் கூடுகட்டும்
மாடுகட்டிப் போரடித்தால் மாளாது செந்நெல் என்று
யானை கட்டிப் போரடிக்கும் அழகான தென்மதுரை'

என நாட்டுப்புற மக்களால் நயம்பட உரைக்கப்படுவது மதுரை. பாண்டி மண்டலத்தின் தலைநகர் மதுரை. இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டு கால இடையறா வரலாறு கொண்ட இதனைத் தமிழகத்தின் பண்பாட்டுத் தலைநகர் (Cultural Capital) என கூறலாம். இன்றைய மதுரை மாவட்டத்தின் தலைநகரமும் இதுவே.

இம்மாவட்டத்தின் வரலாறும், மண்ணின் மாண்புகளும் ஆங்கிலத்திலும், தமிழிலும் முன்னரே பல அறிஞர்களால் எழுதி வெளியிடப்பட்டுள்ளன. அண்மைக் காலங்களில் தொல்லியல் துறையின் மூலம் தீவிர கள ஆய்வுகளும், கல்வெட்டு முனைப்புத் திட்டமும் செயல்படுத்தப்பட்டுள்ளது. அகழாய்வுகளும் மேற்கொள்ளப்பட்டுள்ளன. மாவட்டம் முழுமையும் உள்ள கல்வெட்டுகள் படியெடுத்துப் படிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு ஊர் பற்றியும் வரலாற்றுச் செய்திகள் சேகரிக்கப்பட்டுள்ளன. இவற்றின் அடிப்படையில் மதுரை மாவட்டத்தின் வரலாற்றைத் தொல்லியல் நோக்கில் எளிய மக்களும் அறியும் வகையில் தமிழில் ஆக்கித்தர வேண்டும் என்பது தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையின் செயல் திட்டங்களில் ஒன்றாகும்

பாண்டியர், சோழர், முகமதியர், விசயநகர வேந்தர், மதுரை நாயக்கர், ஆங்கிலேயர் எனப் பல அரசு மரபினரால் ஆளப்பட்டது மதுரை. சைவம், வைணவம், சமணம், பௌத்தம், இஸ்லாம், கிறித்துவம்

என அனைத்துச் சமயங்களுக்கும் சமமான ஆதரவு காட்டிய மண் மதுரை மண். அனைத்து அரச மரபினரின் சான்றுகளும், அனைத்துச் சமயத்தவர்களின் சின்னங்களும் இன்றும் இங்கு வாழும் சான்றுகளாக நிலைத்துள்ளன. இவற்றையெல்லாம் பதிவு செய்து ஒருங்கிணைந்த ஒரு தொல்லியல் கையேடாக அமைந்துள்ளது இந்நூல்.

தமிழகத்தின் தொன்மையான பிராமி கல்வெட்டுகள் மிகுதியாகக் காணப்படுவது மதுரை மாவட்டத்தில் தான். அவற்றிற்கு அடுத்த வகையான வட்டெழுத்துக் கல்வெட்டுகளும் இப்பகுதியில் பரவலாகக் கிடைக்கின்றன. இவை காட்டும் வரலாற்று வெளிச்சங்கள், வழங்கிய காசுகள், பேணப்படும் வரலாற்றுச் சின்னங்கள், பண்பாட்டுப் பதிவுகள் உள்ள ஊர்கள் என ஒவ்வொரு வகையிலும் இந்நூலில் விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன.

இவ்வரலாற்றுக் கையேட்டினை உருவாக்குவதில் பெரும்பங்கு வகித்தவர்கள் மதுரை மாவட்டத் தொல்லியல் அலுவலர் முனைவர் சொ. சாந்தலிங்கம், மதுரை சிறப்பு நிலை கல்வெட்டாய்வாளர் முனைவர் வெ.வேதாசலம், திரு. பொ. இராசேந்திரன் ஆகியோர். மதுரை மாவட்டத்தில் தொல்லியல் துறை பாதுகாக்கும் மரபுச் சின்னங்களின் படங்களை எடுத்துத் தந்தவர் இத்துறை நிழற்படக்காரர் திரு மு.த. ஸ்ரீதரன். இந்நூலை அச்சுக்குத் தயார் செய்து வெளிக் கொணர்வதில் பொறுப்பேற்றுச் செயல்பட்டவர் சென்னை சிறப்பு நிலைக் கல்வெட்டாய்வாளர் முனைவர் சு. இராசகோபால் அவர்கள். இவர்கள் அனைவர்க்கும் எனது பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இத்துறையின் வெளியீடுகளுக்கு நிதி உதவி நல்கிப் பணிகளை ஊக்குவித்து வரும் தமிழ்நாடு அரசிற்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தொல்லியல் ஆர்வலர்களும், ஆய்வாளர்களும், மாணவர்களும், பொதுமக்களும் இக்கையேட்டினைப் பெரிதும் வரவேற்றுப் பயன்பெறுவர் என உறுதியாக நம்புகிறேன்.

7.11.2005 **தி. ஸ்ரீ. ஸ்ரீதர்**

சென்னை – 8 சிறப்பு ஆணையர்

# உள்ளடக்கம்

## வரலாற்று பின்னணி



## வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்கள்

## செய்தித் தொகுப்புகள்

# 1. தொல்பழங்காலம்

தொல்பழங்காலத்தைப் பழைய கற்காலம், இடைக் கற்காலம், புதியகற்காலம் என வகைப்படுத்துவர் தொல்லியல் அறிஞர். இதன் அடுத்த கட்டமாகப் பெருங்கற்காலம் அல்லது இரும்புக்காலம் அமையும்.

## பழைய கற்காலம்

பழைய கற்காலத்தை முதல், இடை, கடை என மூன்று வகைப்படுத்துவர். 1863இல் ராபர்ட் புரூஸ்புட் எனும் நிலவமைப்பியல் ஆய்வாளர் முதன்முதல் பல்லாவரத்தில் ஒரு பழங்கற்காலக்கருவியைக் கண்டறிந்தார். அவர் தனது தொடர்ந்த ஆய்வின் மூலம் தமிழகத்தில் பல இடங்களில் பழங்கற்கால அமைவிடங்களைக் கண்டறிந்தார்.

கரடு முரடான கருவிகளைக் கொண்டு வேட்டையாடி உணவு தேடி வாழ்ந்த காலம் பழைய கற்காலம் எனப்படும். நிலையான தங்குமிடமில்லாத நிலை இக்காலத்தில் இருந்தது.

மதுரை மாவட்டத்தில் ஆவியூர் எனும் இடத்தில் ராபர்ட் புரூஸ்புட் பழங்கற்கருவியைக் கண்டறிந்தார். இவ்வூர் இன்றைய விருதுநகர் மாவட்டத்தில் அடங்கி யுள்ளது. மதுரையிலிருந்து அருப்புக்கோட்டை செல்லும் சாலையில் சுமார் 20 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது.

இடைக்கற்காலக் கருவிகள் மதுரை மாவட்டத்தில் திருமங்கலம் வட்டத்தில் பல இடங்களில் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. மரட்டாற்றில் (மலட்டாற்றின்) களிமன் படுகையில் தெ. புதுப்பட்டி என்ற ஊருக்கு அருகிலும் சீவரக்கோட்டை என்ற ஊருக்கு அருகிலும் இவை கிடைத்துள்ளன.

கடைக்கற்காலக் கருவிகள் திருமங்கலம், பெரியகுளம் வட்டங்களில் சில கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. திருமங்கலம் வட்டத்தில் திடியன், டி. கல்லுப்பட்டி ஆகிய ஊர்களில் மலைக்குன்றின் அடிவாரங்களிலும், போடி நாயக்கனூருக்கு அருகில் கோடங்கிபட்டி, தத்தனோடை மேடு என்ற மலையடிவார இடங்களிலும் ஏராளமாகக் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. மதுரை மாவட்டத்தில் கிடைத்துள்ள கருவிகள் ஜாஸ்பர், சால்சிட்னி, கிரிஸ்டல், வரியோடிய அகேட் ஆகிய கல்வகைகளைப் பயன்படுத்திச் செய்யப்பட்டவை யாகும். இவையாவும் உருவத்தில் மிகச் சிறியவையாகச் செய்யப்பட்டன. ஓர் அங்குலமும் அதற்கும் குறைவான அளவும் உள்ள கருவிகளே ஏராளமாகக் காணப்படுகின்றன.

## புதிய கற்காலம்

பழைய கற்காலக் கருவிகள் போல் இல்லாமல் இக்காலக் கருவிகள் செதுக்கி தேய்க்கப்பட்டு மெருகேற்றப் பட்டவையாயிருந்தன. வேட்டையாடும் நிலையிலிருந்து சிறிது முன்னேறி ஓரிடத்தில் நிலையாகக் குடியேறி ஏதோ ஒரு வகையில் வேளாண்மை செய்யக் கற்றுக்கொண்ட மக்கள் வாழ்ந்த காலமே புதியகற்காலம் என வரையறுக்கப் பட்டுள்ளது.

தமிழ்நாட்டில் சேலம், தர்மபுரி மாவட்டங்களில் சேர்வராயன் மலைத்தொடரிலும், வடார்க்காடு மாவட்டத்தில் சவ்வாது, ஏல மலைத் தொடர்களிலும் புதிய கற்காலக் கோடரிகள் ஏராளமாகத் தரைமட்டத்திலேயே கிடைக்கின்றன.

புதிய கற்கால மக்கள் மலைகள் மீது குடிசைகளில் வாழ்ந்தார்கள். ஆவினங்களைப் பேணி வளர்த்தார்கள். கேழ்வரகு, கொள்ளு, பச்சைப்பயறு முதலான தானியங் களைப் பயிர் செய்தார்கள். வேட்டையாடுதலையும் ஒரு தொழிலாகக் கொண்டிருந்தார்கள்.

மதுரை மாவட்டத்தில் மதுரைக்குத் தெற்கில் புதிய கற்காலக் கருவிகளை வெள்ளாங்குளம் என்னுமிடத்தில் ராபர்ட் புரூஸ்புட் கண்டறிந்துள்ளார். அண்மையில் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையைச் சேர்ந்த ஆய்வாளர்கள் மதுரை மாவட்டம் துவரிமான் என்னும் ஊரில் வைகைக் கரையில் புதிய கற்காலக் கருவிகள் சிலவற்றைக் (கோடரிகள்) கண்டறிந்தார்கள். கோவலன் பொட்டல் அகழாய்வில் உடைந்த ஒரு புதிய கற்காலக் கருவி வெளிப்பட்டது. போடிக்கருகில் செலமலை என்னும் இடத்தில் ஒரு புதிய கற்கால கைக்கோடரி சேகரிக்கப் பட்டுள்ளது.

## பெருங்கற்காலம்

பெரிய பெரிய கற்களைக் கொண்டு ஈமச்சின்னங்களை அமைத்த மக்கள் வாழ்ந்த காலத்தைப் பெருங்கற்காலம் என வரையறை செய்துள்ளனர். இறந்தவர்களைப் புதைத்த இடத்திலோ அல்லது அவர்களது எலும்புகளைப் புதைத்த இடத்திலோ பெரிய கற்களைக் கொண்டு அமைக்கப்பட்ட ஈமச்சின்னங்கள் பெருங்கற்சின்னங்கள் எனப்படும். இத்தகு சின்னங்கள் பல பெயர்களில் அழைக்கப்படுகின்றன. அவை, கல்திட்டை, கல்பதுக்கை, மண்குவை, கற்குவை, கல்வரிசை, தொப்பிக்கல், குடைக்கல், தாழி, ஈமப்பேழை, நடுகல், குடைவரைத் தாழ்வரை என்பவையாகும். மதுரை மாவட்டத்தில் பெரும்பாலும் ஈமத்தாழிகளே பயன்படுத்தப்பட்டுள்ளன.

மதுரை மாவட்டத்தில் அரிட்டாபட்டிக்கு அருகில் பெருமாள்மலை அடியடிவாரத்தில் பல நூற்றுக்கணக்கான தாழிகள் உள்ளன. மதுரைக்கு அருகில் விளாங்குடி, அனுப்பானடி, பரவை முதலான இடங்களில் தாழிக்காடுகள் உள்ளன. கொடைக்கானலினும், பழனிமலைக் குன்றுகளிலும் பலகற் திட்டைகள் காணப்படுகின்றன. இப்பகுதி தற்போது திண்டுக்கல் மாவட்டத்தில் அமைந்துள்ளது. கொடைக் கானலுக்குக் கீழே 3500 அடி உயரத்தில் அரசிப்பாறை

என்ற இடத்தில் கல்திட்டைகள் கும்பல் கும்பலாகச் சுற்றிலும் கல்சுவர்களைக் கொண்டுள்ளன. மதுரை மாவட்டத்தை ஆய்வு செய்த தொல்லியல் ஆய்வாளர் ஒருவர் இம் மாவட்டத்தில் எல்லா ஊர்களிலும் ஒரு தாழி இருப்பிடம் காணப்படுவதாகத் தெரிவித்துள்ளார். இந்தத் தாழிக் காடுகள் ஊர்களுக்கு வெளியில் சவக்காடு என்ற பெயரில் வழங்கி வருகின்றன. அண்மையில் தாண்டிக்குடி மலையில் பல கல் பதுக்கைகள் அகழாய்வு செய்து வெளிப்படுத்தப்பட்டுள்ளன.

மதுரை மாவட்டத்தில், மேலூர் வட்டம் கருங்காலக்குடி, பழனி வட்டத்தில் பழனி, கலையமுத்தூர், நிலக்கோட்டை வட்டம், குலசேகரன்கோட்டை, மதுரை வட்டம் பரவை, துவரிமான், தாதம்பட்டி, அனுப்பானடி, திருமங்கலம் வட்டம் திருமங்கலம், பேரையூர், செங்குளம் ஆகிய ஊர்களில் பெருங்கற் சின்னங்கள் உள்ளனவாகத் தெரிவிக்கப் பட்டுள்ளன.

பெருங்கற்கால மக்கள் கருப்பு - சிவப்பு, கறுப்பு, சிவப்பு, செம்பழுப்புப்பூச்சு என்ற நால்வகை மட்கலங்களைப் பயன்படுத்தியுள்ளனர். ஈமக்கலங்களாக வும், உண்கலங் களாகவும் இத்தகைய மட்கலங்கள் பயன்படுத்தப் பட்டிருக் கலாம். இவற்றிற்கு அடுத்து இரும்புப் பொருட்கள் ஏராளமாகப் பயன்படுத்தப் பட்டுள்ளன. இதனாலேயே இக்காலத்தை இரும்புக்காலம் என்றும் அழைப்பர். வெண்கலம், தங்கம் ஆகியவற்றையும் இக்கால மக்கள் ஓரளவு பயன்படுத்தியுள்ளனர்.

பலவகையான மணிகளை அணிகலங்களாகப் பயன் படுத்தியுள்ளனர். இக்கால மக்கள், கார்னீலியன், ஜாஸ்பர், அகேட், ஆணிகல், செர்பண்டைன், ஸ்டீடைட், குவார்ட்ஸ் ஆகிய அரிய கல்வகைகளைக் கொண்டு மணிகளும் சங்குகளை அறுத்து வளையல்களும் செய்துள்ளனர்.

ஏரிகள், குளங்களை இவர்கள் உருவாக்கினார்கள். வேளாண்மை முக்கிய தொழிலாக இருந்தது. வேட்டையாடியும் உள்ளனர். கால்நடைகளை மேய்த்தும் அவற்றை வேளாண் தொழிலுக்குப் பயன்படுத்தியும் வாழ்ந்துள்ளனர். வீடுகள் அமைத்து வாழ்ந்தனர். கற்களைக் கொண்டு வீட்டுப்பயனுக்கு வேண்டிய அம்மிகள், குழவிகள், உரல்கள் போன்றவற்றை உருவாக்கியுள்ளனர். இரும்பினால் மண்வெட்டி, அரிவாள், கருக்கரிவாள், வேல், ஈட்டி, சுத்தி போன்றவற்றைச் செய்துள்ளனர். இக்கால மக்கள் நிலையான தங்குமிடமும், கட்டுச்சமூக வாழ்க்கையும் கொண்டிருந்தனர்.

# 2. மதுரை பற்றிய தொன்மைக் குறிப்புகள்

பாண்டியர்களின் தலைநகரமான மதுரை பற்றிய குறிப்புகள் இராமாயணம், மகாபாரதம் ஆகிய இதிகாசங்களில் இடம்பெற்றுள்ளன. விந்தியமலைக்குத் தெற்கில் இருந்த அரசுகளைக் குறிப்பிடும் போது சேர, சோழ, பாண்டியரைப் பற்றிக் குறிப்பிடுகிறார் வால்மீகி. திரவுபதியின் சுயம்வரத்தில் பாண்டிய அரசன் ஒருவன் கலந்து கொண்டதாக மகாபாரதத்தில் குறிக்கப் பட்டுள்ளது. பாரதப் போரில் பாண்டியன் ஒருவன் பங்கு பெற்றதாகவும் கூறப்பட்டுள்ளது.

கி.மு. 4ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இலக்கணியான காத்யாயனர் சேர, சோழ, பாண்டியரைக் குறிப்பிடுகிறார். கவுடில்யரின் அர்த்தசாஸ்திரத்தில் பாண்டிய நாட்டின் முத்தும், மஸ்லின் துணியும் சிறப்பித்துப் பேசப்பட்டுள்ளது. சோதிட வல்லுநரான வராகமிகிரர் தன்னுடைய பிரகத்சம்ஹிதையில் பாண்டியர் பற்றிக் குறிப்பிடுகிறார். காளிதாசரும் பாண்டியர் பற்றிக் குறித்துள்ளார்.

இலங்கையின் வரலாறு கூறும் மகாவமிசத்தில் கி.மு. ஐந்தாம் நூற்றாண்டில் இலங்கையை முதல் முதலாக ஆட்சி செய்த மன்னன் விஜயன் பாண்டிய அரசன் மகளை மணந்தான் என்று கூறப்பட்டுள்ளது. கிரேக்கர், ரோமானியருடன் மதுரை மிகுந்த தொடர்பு கொண்டுள்ளது. சந்திரகுப்த மௌரியரின் அவையில் செலுக்கஸ் நிகேடாரின் தூதுவனாய் வீற்றிருந்த மெகஸ்தனிஸ் (கி.மு. 320) பாண்டியர் பற்றியும் அந்நாடு ஒரு பெண்ணரசியால்

*ஆளப்படுவது பற்றியும் குறிப்பிட்டுள்ளான். ஸ்டார்போ (கி.மு. 25) என்பவர் ரோமானிய அரசர் அகஸ்டஸின் அவைக்கு பாண்டிய மன்னன் ஒரு தூதுவரை அனுப்பியதாகக் குறித்துள்ளார்.*

*கி.பி. 75ஐச் சேர்ந்த பிளினியின் குறிப்பில் மதுரையும் பாண்டியரும் இடம்பெறுகின்றனர். கி.பி. 130ஐச் சேர்ந்த தாலமி மதுரையைப் பாண்டியனின் தலைநகர் எனக் குறிப்பிட்டுள்ளார். அசோகனுடைய பாறைச் சாசனத்திலும் பாண்டியர் குறிக்கப்பட்டுள்ளனர்.*

*மதுரைக்கு அருகில் கிடைத்துள்ள பிராமிக் கல்வெட்டுக்களுள் அழகர்மலை கல்வெட்டில் மதிரய் மற்றும் மத்திரை எனும் பெயரும் மேட்டுப்பட்டிக் கல்வெட்டில் மதிரை எனும் பெயரும் மதுரையைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளன. இக்கல்வெட்டுகளின் காலம் கி.மு. 2 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டதாகும். கி.பி. 5 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பூலாங்குறிச்சி கல்வெட்டில் மதிரை 'உலவியத்தான் குளம்' என ஒரு குறிப்பு இடம் பெற்றுள்ளது.*

# 3. சங்க கால மதுரை

தமிழகத்தில் தலை, இடை, கடை என மூன்று சங்கங்கள் இருந்தன எனவும், அதில் கடைச் சங்கம் மதுரையில் இருந்தது என்றும் இலக்கியங்கள் வாயிலாக அறிகிறோம். மூன்றாம் சங்கமான கடைச் சங்கக் காலத்தில் 49 பாண்டிய மன்னர்கள் மதுரையை ஆண்டதாகக் கூறுவர். அவர்களில்,

1. நெடியோன் (அல்லது) வடிம்பலம்ப நின்ற பாண்டியன்
2. முடத்திருமாறன்
3. பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி
4. பசும்பூட் பாண்டியன்
5. தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்
6. சித்திரமாடத்துத்துஞ்சிய நன்மாறன்
7. இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறன்.
8. கூடக்காரத்துத்துஞ்சிய மாறன் வழுதி
9. வெள்ளியம்பலத்துத்துஞ்சிய பெருவழுதி
10. கானப்பேர் எயில் எறிந்த உக்கிரப்பெருவழுதி
11. கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி
12. பாண்டியன் அறிவுடை நம்பி
13. ஒல்லையூர் எறிந்த பூதப்பாண்டியன்
14. ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்
15. கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி
16. நல்வழுதி

ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்கள் தவிர நம்பி நெடுஞ்செழியன், அண்டர் மகன் குறுவழுதி, மாலைமாறன், மாறன் வழுதி எனும் சிலரும் சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படுகின்றனர்.

*சங்கப் புலவர்களாக 450 புலவர் பெயர்கள் கிடைத்துள்ளன. இவர்களில் 100 பேர் மதுரைப் பகுதியைச் சேர்ந்தவர்கள். 20 பாண்டிய மன்னர்கள் சங்கப் பாடல்களில் இடம்பெற்றுள்ளனர். பத்து பாண்டிய மன்னர்கள் புலவர்களாகவும் இருந்துள்ளனர். மதுரைக் கணக்காயனார், அவர் மகன் நக்கீரன், இறையனார், சீத்தலைச் சாத்தனார், கூலவாணிகன் சாத்தனார், மாங்குடி மருதனார், மருதன் இளநாகனார் ஆகியோர் மதுரைப் புலவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள்.*

*மதுரை நகரமைப்பையும், அரண்மனையையும் பற்றி சங்க நூல்களான மதுரைக்காஞ்சி, நெடுநெல்வாடை பரிபாடல் ஆகியவை விரிவாகப் பேசுகின்றன. மதுரை நகரைப் பற்றிய வருணனையில்,*

வையை அன்ன வழக்குடை வாயில்
வகை பெற எழுந்து வானம் மூழ்கி
சில் காற்று இசைக்கும் பல் புழை நல் இல்
யாறுகிடந்தன்ன அகல் நெடுந் தெருவில்

*(மதுரைக் காஞ்சி. அடி 356 - 359)*

*எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. கூடல் என்றும் இந்நகருக்கு ஒரு பெயர் உண்டு. அங்குள்ள நாளங்காடிகள் பற்றிக் குறிப்பிடும் போது,*

மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்
நாள் அங்காடி நந்தலைக் கம்பலை

*(மதுரை. அடி 429 - 430)*

*என விவரிக்கப்பட்டுள்ளது. சிவபெருமான் இவ்வூரின் தலைவனாக வீற்றிருக்கிறான் என்பதை,*

மழுவாள் நெடியோன் தலைவன் ஆக
மாசு அற விளங்கிய யாக்கையர் சூழ்சுடர்.

*(மதுரை. அடி. 455 - 456)*

*என்னும் அடிகளால் அறியலாம். மதுரை நகரில் பல சமயத்தைச் சார்ந்தவர்களும் இருந்தனர் என்பதையும் மதுரைக்காஞ்சி கூறுகிறது. இங்கிருந்த பௌத்த பள்ளியைச் சுட்டும் போது,*

காமர் கவினிய பேரிளம் பெண்டிர்
பூவினர் புகையினர் தொழுவளர் பழிச்சிச்
சிறந்து புறங்காக்கும் கடவுள் பள்ளியும்,

*(மதுரை. அடி. 465 - 467)*

*என்று உரைக்கப்பட்டுள்ளது. அந்தணர் பள்ளி பற்றிக் குறிப்பிடும் போது,*

அறநெறி பிழையா அன்புடை நெஞ்சின்
பெரியோர் மேஎய் இனிதின் உறையும்
குன்று குயின்றன்ன அந்தணர் பள்ளியும்

*(மதுரை. அடி. 472 - 474)*

*என்று குறிப்பிடப்படுகிறது. சமணர் இருக்கைகளும் தனியே இருந்துள்ளன.*

பூவும் புகையும் சாவகர் பழிச்ச
சென்ற காலமும் வருஉம் அமயமும்
......................
இறும்பூது சான்ற நறும் பூஞ்சேக்கை

*(மதுரை. அடி. 476-488)*

*என்ற அடிகளில் சமணர் இருக்கைகள் பற்றி விரிவாகப் பேசப்பட்டுள்ளன.*

*மதுரை நகரின் அமைப்பும், அரண்மனையின் பெருமையும் நெடுநல்வாடையில் விரிவாகத் தரப்பட்டுள்ளன.*

மாடம் ஓங்கிய மல்லல் மூதூர்
ஆறுகிடந்தன்ன அகநெடுந்தெருவில்

*(நெடு. அடி 29-30)*

என்று தெருக்களின் அமைப்பும் விரிவும் கூறப்படுகிறது. அரண்மனையை மனைநூல் வல்லார் அமைத்தமையை,

நூல் அறிபுலவர் நுண்ணிதின் கயிறிட்டு
தேஎம் கொண்டு தெய்வம் நோக்கி
பெரும் பெயர் மன்னர்க்கு ஒப்ப மனை வகுத்து

(நெடு. அடி. 76-78)

என்னும் அடிகள் உணர்த்தும்.

வென்று எழு கொடியோடு வேழம் சென்றுபுக
குன்று குயின்றன்ன ஓங்கு நிலை வாயில்

(நெடு. அடி. 87-88)

என்று அரண்மனையின் உயர்ந்தோங்கிய வாசல் விவரிக்கப் பட்டுள்ளது.

மதுரை நகரம் ஒரு தாமரை மலர் போல அமைந்திருந்தது என்பதைப் பரிபாடல் கூறும்.

மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரை
பூவொடு புரையும் சீறூர் பூவின்
இதழகத்தனைய தெருவம் இதழகத்து
அரும் பொகுட்டனைத்தே அண்ணல் கோயில்
தாதின் அனையர் தண்டமிழ்க் குடிகள்
தாதுண் பறவை அனையர் பரிசில் வாழ்நர்

மதுரை மாநகரம் தாமரை மலருக்கு இணையானது. பூவின் இதழ்கள் போல தெருக்கள் அமைந்திருந்தன. இதழ்கள் சூழ்ந்த மொட்டு போல கோயில் அமைந்திருந்தது. கோயில் என்பதை மன்னனின் அரண்மனை என்றும் கொள்ளலாம். பூவின் மகரந்தம் போன்று தமிழ்க்குடிகள் வாழ்ந்தனர். பரிசு பெற்று வாழும் புலவர்கள் அம்மக்களின் கொடையால் நிறைவுற்றனர் என்று இப்பாடல் மூலம்

அறியப்படுகிறது.

வையை நதியும், கிருதமாலா நதியும் மதுரையை வளமாக்கின. இருந்தையூர் எனும் பகுதியில் இன்றைய கூடல் அழகர் கோவில் அமைந்திருந்தது. கோயிலின் அருகிலேயே கிருதமாலைநதி ஓடியது என்று பல அரிய செய்திகள் மதுரையைப் பற்றிப் பல இலக்கியங்களிலும் இடம்பெற்றுள்ளன.

# 4. முற்காலப் பாண்டியப் பேரரசு

மதுரைப் பகுதியில் சங்க காலப் பாண்டியர் ஆட்சி களப்பிரர் வருகையால் முடிவுக்கு வந்தது. கருநாடகப் பகுதியிலிருந்து தமிழகம் வந்த களப்பிரர்களால் கி.பி. 3ம் நூற்றாண்டு முதல் கி.பி. 6ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி வரை தமிழகம் ஆளப்பட்டது. இவர்களது ஆட்சி முறை, அரசு பரம்பரை வழிமுறை எத்தகையது என்பது பற்றிய எவ்விதச் சான்றுகளும் நமக்குக் கிடைத்தில. எனவே, இக்காலத்தைத் தமிழக வரலாற்றில் இருண்ட காலம் என வரலாற்று ஆசிரியர் கருதுவர். களப்பிரருடைய படையெடுப்பு தமிழக அரசியலில் பெரும் மாறுதல்களைச் செய்ததோடு, சமூக, சமய, கலாச்சார வாழ்விலும் பெரும் மாறுதல்களைச் செய்தது. வைதீக மதங்களுக்கு எதிராகவும் சமண, பௌத்த மதங்களுக்கு ஆதரவாகவும் செயல்பட்டனர் களப்பிரர்கள். ஆனால் இந்த நிலை நெடுங்காலம் நீடிக்கவில்லை. ஆறாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் தொண்டை மண்டலத்தில் பல்லவர்களும் பாண்டி மண்டலத்தில் பாண்டியர்களும் எழுச்சி பெற்றனர். களப்பிரர்களை வென்று தத்தம் ஆட்சியை அவ்வப்பகுதியில் நிலை நிறுத்தினர். அந்த வகையில் மதுரையில் பாண்டிய அரசை அமைக்கக் காரணமாயிருந்த முதல் அரசன் கடுங்கோன் என்பவன். இம்மன்னன் காலம் முதல் சுமார் 270 ஆண்டுகள் பாண்டிய மன்னர்கள் பலர் மதுரையைத் தலைநகரமாகக் கொண்டு ஆட்சி செய்தனர். இப்பாண்டியர் அரசு முற்காலப் பாண்டியப் பேரரசு எனக் கருதப்படும். இப்பேரரசு

தொடர்பான வரலாற்றை அறிந்து கொள்ள ஆதாரங்களாக அமைபவை இம்மன்னர்களில் சிலர் வெளியிட்ட செப்பேடுகளேயாகும். அவற்றில் வேள்விக்குடிச் செப்பேடு, தளவாய்புரம் செப்பேடு, சிவகாசிச் செப்பேடு, சின்னமனூர்ச் செப்பேடு ஆகியவை முக்கியமானவையாகும்.

## கடுங்கோன்

களப்பிரர்களின் வசமிருந்த பாண்டிய நாட்டை மீட்ட பெருமைக்குரியவன் இம்மன்னன். இவனது ஆட்சிக் காலம் கி.பி. 575 முதல் 600 வரை எனலாம். இவனைப் பற்றி வேள்விக்குடிச் செப்பேடு, 'படுகடன் முளைத்த பருதி போல் வெளிப்பட்ட பாண்டியாதிராசன்' என்றும் ஒடுங்கா மன்னர் ஒளிநகரழிந்த கடுங்கோன் என்றும் கதிர்வேற் றென்னன் என்றும் சிறப்பித்துக் கூறுகிறது. களப்பிரரை வேரறுத்தவன், திரண்ட தோள்களை உடையவன், மறையோருக்குத் திருமங்கலம் என்னும் கிராமத்தைக் கொடையளித்தவன் என்று தளவாய்புரம் செப்பேடு கூறும். இம்மன்னன் பற்றிய வேறு செய்திகள் எதுவும் கிடைக்கவில்லை.

## மாறவர்மன் அவனி சூளாமணி

இம்மன்னனது ஆட்சிக் காலம் கி.பி. 600 - 620 ஆகும். மாறவர்மன் என்ற சிறப்புப் பெயரைச் சூட்டிக் கொண்டவன். இவன் காலம் முதல் பாண்டிய மன்னர்கள் ஒருவர் பின் ஒருவராக மாறவர்மன், சடையவர்மன் என்ற சிறப்புப் பெயர்களை மாறி மாறி சூட்டிக் கொண்டனர். இம்மன்னனை உண்மையின் தோழன், கடல் போன்ற சேனையை உடையவன் என்று செப்பேடுகள் கூறுகின்றன. வேறு சிறப்புச் செய்திகள் எதுவும் அறிவதற்கான சான்றுகள் கிடைத்தில.

### செழியன் சேந்தன்

*இவன் மாறவர்மன் அவனி சூளாமணியின் மகன். இவன் கி.பி. 620 முதல் 642 வரை அரசு செலுத்தியவன். செங்கோற் சேந்தன், வேந்தர் வேந்தன் என்று வேள்விக் குடிச் செப்பேட்டால் சிறப்பித்துப் பேசப்படுகிறான். வானவன் என்ற சிறப்புப்பெயர் பெற்றுள்ளதால் சேரரை வென்றவன் எனக் கருத இடமுண்டு. ஜயந்தன் என்ற பெயரும் இவனுக்குரியதே. திருநெல்வேலி மாவட்டம் மலையடிக்குறிச்சி குகைக் கோயிலில் காணப்படும் இவனது கல்வெட்டு ஒன்று இவனை மாறன் மகன் சேந்தன் என்ற பொருளில் மாறன் சேந்தன் எனக் குறிப்பிடுகிறது. இவனது 17 ஆம் ஆட்சியாண்டில் இக்கோயில் எடுக்கப்பட்ட விபரத்தை இக்கல்வெட்டுத் தெரிவிக்கிறது. அண்மைக் காலத்தில் மதுரை வைகைக் கரையில் கண்டுபிடிக்கப்பட்ட வட்டெழுத்துக் கல்வெட்டு ஒன்று இவன் காலத்தது என்ற ஒரு கருத்து உண்டு. ஆனால் இது அவன் மகன் மாறவர்மன் அரிகேசரியின் காலத்ததே என்பது மிகப் பொருத்தம்.*

### மாறவர்மன் அரிகேசரி

*சேந்தனின் மகன். கி.பி. 642 முதல் 700 வரை அரசாட்சி புரிந்தவன். வேள்விக்குடிச் செப்பேடு இவனைப் பலபடப் புகழ்ந்து பேசுகிறது. இவன் தன் ஆட்சிக் காலத்தில் மாற்றரசர் பலருடன் போரிட்டு வென்றான். 'பாழிவாய் அமர் கடந்தும்', 'நெல்வேலிச் செருவென்றும்' என்று செப்பேடு கூறும். பாழி என்னும் ஊர் எங்குள்ளது என்று புலப்படவில்லை. நெல்வேலிப் போர் வெற்றி என்பது மேலைச் சாளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தனைப் புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள நெல்வேலி என்ற ஊரில் தோற்கடித்துப் பெற்றதாகும். தென்பாண்டி நாட்டின் கடலோரப் பகுதிகளில் கலகம் செய்த பரதவர்களைக் கடத்தினான்.' செந்நிலம்' என்ற ஒரு பகுதியிலும் யானைப் படை கொண்டு வென்றான் இவன். கேரள அரசனை வென்றான். இவன் காலத்தில் பாண்டிய நாட்டின் எல்லை*

விரிவடைந்தது. சேரரும், சோழரும் இவன் கீழ்ப்படிந்து வாழ்ந்தனர். மாறன் அரிகேசரியின் காலத்தைச் சேர்ந்த கல்வெட்டு ஒன்று ஏனாதி என்னுமிடத்தில் அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டது. இதன் மூலம் இவனது நெல்வேலிப் போர் வெற்றியும், அந்தணர்களுக்கு அளித்த பலவித கொடைகளும் அறியப்படுகின்றன.

இம்மன்னன் வைதீக சமயத்திற்குப் பெரும் ஆதரவு கொடுத்தவன். முதலில் சமணம் தழுவிய இவன் திருஞான சம்பந்தரின் அறிவுரையால் சைவ சமயம் மீண்டான். இவன் மனைவி வளவர் கோன் பாவையாம் சோழ இளவரசி மங்கையர்கரசியாரும் அமைச்சர் குலச்சிரையாரும் இவனை வைதீக மதமாற்றம் செய்வதில் பெரும் பங்காற்றியவர்கள். இம்மூவரும் சைவ நாயன்மார்கள் 63 பேரில் இடம்பெற்று உள்ளனர். 'நெல்வேலி வென்ற நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கு அடியேன்' என்று இவனைப் பற்றிச் சுந்தரர் தன் திருத்தொண்டர் தொகையில் குறிப்பிட்டுள்ளார். கூன்பாண்டியன் என்றும் நின்ற சீர் நெடுமாறன் என்றும் இவனுக்குப் பெயர் உண்டு. பாண்டிய மன்னர்களிலேயே நெடுங்காலம் ஆட்சி செய்தவன் எல்லாத் துறைகளிலும் வெற்றி பெற்றவன் இம்மன்னன்.

**கோச்சடையன் ரணதீரன்**

அரிகேசரி மாறவர்மனின் மகன் இவன். கி.பி. 700 முதல் 730 வரை சிறப்பாக ஆட்சி செய்தவன். வேள்விக்குடிச் செப்பேடு இவனை மன்னர் மன்னன், மதுரகர்நாடகன், கொங்கர் கோமான் என்று பலவாறாகச் சிறப்பித்துப் பேசும். சேர, சோழ மண்டலங்களை இவன் வென்றதோடு கொங்குப் பகுதியையும் கருநாடகப் பகுதியையும் வெற்றி கொண்டான். மேலைச் சாளுக்கியரையும் தோற்கடித்தான் என்பதை 'மங்கலபுர மாநகருள் மாகதரை யெறிந்தழித்து' என்னும் வேள்விக்குடிச் செப்பேட்டுத் தொடரால்

அறிகிறோம். திருப்புடைமருதூர்ப் பகுதியில் இருந்த ஆய்வேளிரை வென்றான். செங்கோடு, புதான்கோடு என்னும் சேர நாட்டுப் பகுதிகளைக் கைப்பற்றினான்.

இவன் தன் மகளைச் சோழ இளவரசனுக்கு மணமுடித்துக் கொடுத்தான். இவன் காலத்தில் சுந்தர மூர்த்தி நாயனாரும் சேரமான் பெருமானும் மதுரைக்கு வந்தனர் என்றும் அவர்களைப் பாண்டியனும் சோழனும் நன்கு உபசரித்தனர் என்றும் அறிகிறோம்.

## முதலாம் இராசசிம்மன்

அரிகேசரி பராங்குச மாறவர்மன் அல்லது மாறவர்மன் இராசசிம்மன் என்று இவன் பெயர் பெறுகிறான். இவனை முதலாம் இராசசிம்மன் என்றும் கூறுவர். இவன் ரணதீரனின் மகனாவான். கி.பி. 730 முதல் 768 வரை அரசு செலுத்தியவன். இவனது சமகாலத்து வேந்தர்களாக இரண்டாம் நந்திவர்ம பல்லவ மல்லன், சாளுக்கிய இரண்டாம் கீர்த்திவர்மன், விக்கிரமாதித்யன், கங்க அரசன் ஸ்ரீ புருசன் ஆகியோரைக் குறிப்பிடுவர். மழகொங்கினை இவன் வென்றான். கொங்கு நாட்டிற்குச் சென்ற போது கொடுமுடியிலுள்ள சிவபெருமானைத் தரிசித்தான். கங்க அரசன் மகள் பூசுந்திரியை மணந்து கொண்டான்.

வைணவ ஆழ்வார்களான பெரியாழ்வார், அவரது வளர்ப்பு மகள் ஆண்டாள், நம்மாழ்வார் அவரது சீடர் மதுரகவி ஆகியோர் இவன் காலத்திலும் இவன் மகன் காலத்திலும் வாழ்ந்தவர்கள். இவனது அமைச்சன் மாறங்காரியும் இவனது மகன் காலத்திலும் அமைச்சனாக இருந்தான். மாறன்காரி தன் அரசனுக்காகச் சாளுக்கியருடன் போரிட்டு வெண்பை என்னுமிடத்தில் வெற்றிகண்டவன். ஆனைமலையில் நரசிங்கப் பெருமாளுக்காகக் குடைவரைக் கோயில் ஒன்றைச் செய்வித்து அது முற்றுப்பெறுமுன்னர் இறந்துவிட்டான். இம்மன்னன் வைணவம் தழுவியவனா யினும் சைவ சமயத்தின் பாலும் அதிக அக்கறை

காட்டியவன். சேர, சோழ, பாண்டிய நாட்டின் மாட மதில்களைப் புதுப்பித்துக் கட்டியவன் என்ற சிறப்பும் இவனுக்குண்டு.

**பராந்தக நெடுஞ்சடையன்**

முதலாம் வரகுணன் என்றும் இவன் பெயர் பெற்றவன். இராசசிம்மனுக்கும் கங்கநாட்டு இளவரசி பூசுந்தரிக்கும் பிறந்தவன். இவன் கி.பி. 768 முதல் 815 வரை ஆட்சி செய்தவன். தனது 3ஆம் ஆட்சியாண்டில் வேள்விக்குடிச் செப்பேட்டையும் 17 ஆம் ஆட்சியாண்டில் சீவரமங்கலம் செப்பேட்டையும் வெளியிட்டவன்.

பல்லவர்களைக் காவிரிக் கரையிலுள்ள பெண்ணா கடத்தில் வென்றான். பல்லவர்க்கு உதவி செய்த சேரரையும் அதியமானையும் வெற்றி கொண்டான். கருருக்கு அருகில் உள்ள ஆயிரவேலி, அயிருர், புகழியூர் ஆகிய இடங்களில் நிகழ்ந்த போரில் அதியனைத் தோற்கடித்து மதுரையில் சிறை வைத்தான். மேலும் வேணாட்டின் ஆய்வேளிரை வென்றான். விழிஞத்தை வென்றான். மனுசரிதன், பண்டிதவத்சலன், கீதகின்னரன் என்று பல சிறப்புப் பெயர்களைப் பெற்றவன்.

இவனும் மந்திரிகளாக மாறங்காரியும் அவன் இறந்த பின் அவன் தம்பி மாறன் எயினனும் இருந்தனர். அவர்களே ஆனைமலை நரசிங்கப் பெருமாள் கோயிலை எடுப்பித்த வர்கள். இவனது படைத்தலைவன் சாத்தன் கணபதி என்பவன். இவன் திருப்பரங்குன்றம் குடைவரைக் கோயிலின் திருப்பணிக்குக் காரணமானவன். இவன் மனைவி நக்கன் கொற்றி என்பவள் இங்குத் துர்க்கைக்கும் சேட்டைக்கும் கோயில்கள் அமைத்தாள்.

## ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன்

பராந்தக நெடுஞ்சடையனின் மகனே ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன். இவனது ஆட்சிக் காலம் கி.பி. 815 - 862 வரையாகும். தளவாய்புரம் செப்பேடும் சின்னமனூர்ப் பெரிய சாசனமும் இவனது வெற்றிகளைப் பற்றி பலபடப் பாராட்டுகின்றன. ஏகவீரன், பரசக்ர கோலாகலன், அவனிபசேகரன் என்று பல சிறப்புப் பெயர்களைப் பெற்றவன். குன்னூரிலும் சிங்களத்தும் வழி ஒத்து வாடாத வாகை சூடினான் என்று சின்னமனூர்ச் செப்பேடு கூறுகிறது. இவனது சிங்கள வெற்றியை மகாவம்சமும் உறுதி செய்கிறது.

பல்லவர்களோடும் போரிட்டு வென்றான் இம்மன்னன். தெள்ளாறெறிந்த நந்திவர்மனுடன் நடந்த போரில் பல்லவனே வென்றான். கி.பி. 859இல் குடமூக்கில் நடந்த போரில் பாண்டியன் வென்றான். பின்னர் அரிசிலாற்றங் கரைப் போரில் வெற்றி வாய்ப்பை இழந்த காரணத்தால் பாண்டியர் வசமிருந்த சில சோழ நாட்டுப்பகுதிகள் பல்லவ மன்னன் நிருபதுங்கன் வசமாயின.

## இரண்டாம் வரகுணன்

தன் தந்தை இறந்த அதே ஆண்டில் முடிசூட்டப் பெற்றவன். கி.பி. 862 முதல் 885 வரை ஆட்சி செய்தான். இவனது தந்தையின் இறுதிக் காலத்திலேயே தமிழக அரசியலில் மாறுதல்கள் தோன்றத் தொடங்கிவிட்டன. கி.பி. 850 அளவில் புதிதாகச் சோழப் பேரரசு விசயாலயன் முயற்சியால் எழுந்தது. பல்லவர்களும் பாண்டியர்களும் சோழர்களால் வலிமை குன்றினர். பல்லவர்களில் நிருபதுங்கனும், பாண்டியரில் வரகுணனும் ஓரணியில் நின்றனர். அபராஜித பல்லவனும், கங்க மன்னன் முதலாம் பிருதிவிபதியும், முதலாம் ஆதித்த சோழனும் ஓரணியில் திரண்டனர். திருப்புறம்பியம் என்னுமிடத்தில் நடந்தபோரில் வரகுணன் தோல்வியைத் தழுவினான். இத்தோல்விக்குப் பிறகு வெகுகாலம் வரகுணன் ஆட்சியில் இல்லை.

ஆன்மீகத்துறையில் ஈடுபட்டு அமைதி தேடியது அவனது மனம். இவன் ஆயுள் காலத்திலேயே இவன் தம்பி பராந்தக வீரநாராயணன் முடி சூட்டப்பெற்றான். திருவாசகம் தந்த மாணிக்கவாசகர் இந்த வரகுணன் காலத்தவரே. அவர் பாடிய திருச்சிற்றபலக் கோவையாரில், 'வரகுணந் தென்னவேந்து சிற்றலம்பத்தான்' என்று இவனைக் குறிப்பிட்டுள்ளார். இம்மன்னன் திருச்செந்தூர் முருகன் கோயிலுக்கு 1400 பொன் கொடையளித்துள்ளான். ஆண்டொன்றுக்கு 2800 கலம் நெல் வழங்க ஏற்பாடு செய்தான் என்பதை அங்குள்ள நீண்ட வட்டெழுத்துக் கல்வெட்டு ஒன்றால் அறிகிறோம்.

**பராந்தகவீர நாராயணன்**

இவனது ஆட்சிக்காலம் கி.பி. 860 முதல் 905 வரையாகும். ஸ்ரீமாற ஸ்ரீவல்லபனுக்கும் பொத்தப்பிச் சோழன் ஸ்ரீகண்டனின் மகள் அக்கள நிம்மடிக்கும் பிறந்தவன். தளவாய்புரச் செப்பேட்டை வழங்கியவன் இவனே. சென்னிலம் என்னுமிடத்தில் தனது தாயாதி சகோதரனைத் தோற்கடித்தான்; கரகிரியை வென்றான் என்பர். கரவந்தபுரம் என்பதே களக்குடி என வழங்கப்பட்டது. இன்று இவ்வூர் உக்கிரன்கோட்டை என்று அழைக்கப் படுகிறது. இவ்வூரில் இம்மன்னன் வீற்றிருக்கும் போது தான் தளவாய்புரச் செப்பேட்டை வழங்கினான். பல பிரமதேயங்கள், தேவதானங்கள் கொடையளித்தான். தந்தை ஸ்ரீவல்லபனைப் போன்றே சிறந்த வைணவ பக்தன். கலிப்பகை, கண்டருள்கண்டன், மகரகேதனன், மதுராபுரி பரமேஸ்வரன், குருசரிதன், செந்தமிழ்க்கோன் எனப் பல பட்டப் பெயர்களைப் பெற்றவன். வானவன் மாதேவி என்னும் சேர இளவரசியை மணந்து பட்டத்தரசியாகக் கொண்டவன். இவள் பெயரால் மதுரைக்கருகிலுள்ள சமண மலையில் 'மாதேவிப் பெரும்பள்ளி' என்ற சமணப் பள்ளியைத் தோற்றுவித்து அதற்கு நில தானங்கள் அளித்துள்ளான் என்று ஒரு கல்வெட்டு கூறுகிறது. இக்கல் வெட்டைத் தமிழ்நாடு தொல்லியல் துறை கண்டறிந்தது.




## இரண்டாம் இராசசிம்மன்

சின்னமனூர்ப் பெரிய செப்பேடுகளை வழங்கியவன் இவனே. பராந்தக வீரநாராயணனுக்கும் வானவன் மாதேவிக்கும் பிறந்தவன் இவன். கி.பி. 900 முதல் 920 வரை ஆட்சி செய்தவன். வஞ்சி மீது படையெடுத்துச் சென்றான். தஞ்சையர் கோனை வென்றான். சோழனின் குறுநிலத் தலைவர்களாகிய கொடும்பாளூர் இருக்கு வேளிரோடு போரிட்டான். இவன் காலத்தில் தஞ்சையை முதலாம் பராந்தக சோழன் ஆண்டான். பராந்தக சோழன் மதுரை கொண்ட கோப்பரகேசரி என்று தன்னைக் கூறிக் கொள்பவன். கி.பி. 910இல் அவன் மதுரையை வென்றான். இராசசிம்மன் இலங்கை மன்னனிடம் படையுதவி பெற்று சோழனோடு போரிட்டான். வெள்ளூர் என்னுமிடத்தில நடைபெற்ற போரில் பாண்டியன் தோற்கடிக்கப்பட்டான். பாண்டியன் இராசசிம்மன் இலங்கைக்குத் தப்பிச் சென்று தன் மகுடத்தையும் அரச சின்னங்களையும் வைத்துவிட்டு சேர நாட்டில் தஞ்சம் புகுந்து வாழ்ந்தான். அவன் பற்றிய வேறு செய்திகள் அறியப்படவில்லை

## சோழன் தலைகொண்ட வீரபாண்டியன்

இரண்டாம் இராசசிம்மனின் மகனே இவன். சோழர் வசமிருந்த பாண்டிய நாட்டை மீட்டு 946 முதல் 966 வரை ஆட்சி செய்தவன் இம்மன்னன். சோழமன்னனை வென்றதால் இவன் சோழன் தலைகொண்ட வீரபாண்டியன் எனப்படுகிறான். 'சோழாந்தகன்' என்ற சிறப்புப் பெயரும் இவனுக்கு உண்டு. இவனது கல்வெட்டுகள் மதுரை வட்டம் கீழ்மாத்தூரிலும் நெல்லை, கன்னியாகுமரி, இராமநாதபுரம் மாவட்டங்களிலும் காணப்படுகின்றன. அண்மையில் இராமநாதபுரம் மாவட்டம் கமுதி வட்டம் நீராவி கிராமத்தில் இம்மன்னனின் 15ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டை தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை கண்டுபிடித்துள்ளது. இங்கிருந்த சிவன் கோயிலுக்கு

இம்மன்னன் காலத்தில் ஆடுகள் தானமளிக்கப்பட்ட செய்தியை இக்கல்வெட்டு கூறுகிறது.

வலிமைபெற்ற சோழர்கள் மீண்டும் பாண்டிய நாட்டைக் கைப்பற்றத் துணிந்தனர். சுந்தரசோழன் மதுரை கொண்ட இராசகேசரி என்று தன்னைக் கூறிக் கொள்கிறான். அவன் மகன் ஆதித்த கரிகாலன் வீரபாண்டியனோடு போரிட்டு அவனை வென்றான் என்று கரந்தைச் செப்பேடுகளும், கன்னியாகுமரிக் கல்வெட்டுகளும் கூறுகின்றன. இப்போர் சேவூர் என்னுமிடத்தில் நிகழ்ந்தது. இதற்குப் பின் சோழர் வசமே பாண்டிய நாடு இருந்தது.

**சடையன் மாறன்**

சடையன் என்ற பட்டப்பெயருடன் மதுரைப் பகுதியை பத்தாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் சுமார் இருபது ஆண்டுகாலம் ஒரு பாண்டிய மன்னன் ஆட்சி புரிந்துள்ளான். அவனது இரண்டு கல்வெட்டுகள் விருதுநகர் மாவட்டம் திருச்சுழி வட்டம் கல்லுமடை என்னுமிடத்தில் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையினரால் கண்டிறியப் பட்டுள்ளன. அங்கிருந்த சிவன் கோயில் ஒன்றுக்கு விளக்கெரிக்க நிலக்கொடை கொடுத்த செய்தியை இக்கல் வெட்டுகள் கூறுகின்றன. இம்மன்னனது இயற்பெயர் என்ன, பெற்றோர் யார் என்பது தெரியவில்லை.

அநேகமாக இவனே முற்காலப் பாண்டியர் வழியில் கடைசி மன்னன் எனலாம். இக்காலத்தில் சோழநாட்டுப் பகுதியில் முதலாம் இராசராசன் அரசு கட்டில் ஏறி பாண்டிய நாட்டை முதன் முதலில் வென்றான். அக்காலத்தில் அமரபுஜங்கன் என்ற பாண்டியன் இப்பகுதியில் இருந்ததாகவும் அவனை இராசராசன் வென்றான் என்றும் திருவாலக்காட்டுச் செப்பேடு கூறுகின்றன. இந்த அமரபுஜங்கன் யார் என்பதும் தெளிவாக இல்லை. இராசராசன் காலம் முதல் சுமார் 200 ஆண்டுகள் பாண்டிய நாட்டுப் பகுதிகள் சோழரின் வசமே இருந்தன.

# 5. சோழர் ஆட்சி

முதலாம் பராந்தக சோழன் (கி.பி. 907-953) முதன் முதலில் மதுரையை வெற்றி கொண்டு 'மதுரை கொண்ட கோபரகேசரி' என்ற சிறப்புப் பெயரையும் பெற்றான். இவன் காலத்தில் நிலையான படை ஒன்று மதுரைப் பகுதியில் நிறுத்தப்பட்டது. அவனது படைத்தலைவன் அருள்நிதிக் கலியன் என்பவன் இங்குத் தங்கியிருந்தான். அவன் ஆனைமலை நரசிங்கப் பெருமாள் கோயிலுக்குக் கொடுத்த தானம் பற்றி பராந்தகனின் வட்டெழுத்துக் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது. இக்கல்வெட்டு ஆனைமலை நரசிங்கர் குடைவரையின் பாறையில் அமைந்துள்ளது.

பின்பு தொண்டை மண்டலத்தில் ஏற்பட்ட இராட்டிர கூடர் படையெடுப்பின் காரணமாகச் சோழரின் கவனம் சிதற, சோழன் தலைகொண்ட வீரபாண்டியன் என்னும் மன்னன் தற்காலிகமாகப் பாண்டிய நாட்டை மீட்டுக் கொண்டான். அதன் பிறகு இரண்டாம் பராந்தகன் என்னும் சுந்தர சோழன் மதுரையைக் கைப்பற்றினான். மதுரை கொண்ட இராஜகேசரி என்ற சிறப்புப் பெயரையும் பெற்றான். இவனுக்குப் பாண்டியனைச் சுரம் இறக்கிய பெருமாள் என்ற பெயரும் உண்டு.

முதலாம் ராசராசனின் பாண்டிய நாட்டு வெற்றியே முடிவான வெற்றியாக அமைந்தது. முதலாம் ராசராசன் காந்தளூர்ச் சாலையை வெல்வதற்காக சேர நாடு நோக்கிச் சென்ற போது அப்போது பாண்டிய நாட்டின் ஆளுநனாக இருந்த அமரபுஜங்கன் என்பவனை வென்றதாகக் கூறப்படுகிறது. ஆனால் அமரபுஜங்கன் யார் என்பதை அறிய முடியவில்லை என வரலாற்றாசிரியர்கள்

கூறுகின்றனர். இந்த அமரபுஜங்கன் கொங்குச் சேரர் தலைவனாக இருக்கலாம். பாண்டியர்களுக்கும் கொங்குச் சேரர் கோக்கண்டன் குடும்பத்தார்க்கும் நல்லுறவு நிலவியது. அம்மரபில் அமரபுஜங்கன் என்னும் ஒரு தலைவன் வரலாற்றில் பேசப்படுகிறான். எனவே இராசராசனால் வெல்லப்பட்டவன் இவனே என்று கொள்வதில் தவறில்லை.

இராசராசன் பாண்டிய நாட்டை வெற்றி கண்டு தனது நேரடி ஆட்சிக்கு உட்படுத்தினான். அது முதல் சுமார் 200 ஆண்டு காலம் பாண்டிய நாடு சோழர் வசமே இருந்தது. இராசராசன் தன் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளைப் பல மண்டலங்களாகப் பிரித்துப் பெயரிட்டபோது பாண்டிய நாடு "இராசராச மண்டலம் என்றும் ராஜ ராஜ பாண்டி நாடு" என்றும் பெயரிடப்பட்டது. ராஜ ராஜ வளநாடு என்றும் பாண்டிய குலாசனி வளநாடு என்றும் சில உட்பிரிவுகளுக்குப் பெயரிடப்பட்டன. ஈழத்தின் மீது ஆதிக்கம் செலுத்துவதற்கு ஏற்ற தளமாகப் பாண்டியநாடு இராசராசனால் பயன்படுத்தப்பட்டது.

இராசராசனின் மகன் முதலாம் இராசேந்திரன் தனது ஐந்தாம் ஆட்சி ஆண்டிலேயே (கி.பி. 1018இல்) ஈழத்தின் மீது படை செலுத்தி வென்று ஒரு நூற்றாண்டுக்கு முன்னர் ஈழத்தில் பாண்டியன் இராஜசிம்மன் விட்டுவிட்டு வந்த சுந்தரமுடியும் இந்திரன் ஆரமும் மீட்டு வந்தான்.

இராசேந்திர சோழன் தான் வென்ற பகுதிகளுக் கெல்லாம் தன் மகன்களையே ஆளுநர்களாக நியமித்து ஆட்சி செய்தான். சோழ பாண்டியன், சோழ கங்கன், சோழ கேரளன், சோழ லங்கேஸ்வரன் என்று அவர்கள் முறையே பாண்டிய, கங்க, சேர, ஈழ நாடுகளில் நிர்வாகம் செய்தனர். அவ்வகையில் சடையவர்மன் சுந்தர சோழ பாண்டியன் என்னும் பெயரில் முதல் ஆளுநன் பாண்டிய நாட்டிற்கு நியமிக்கப்பட்டான். இவன் முதலாம் இராசேந்திரனின் இரண்டாம் மகனாவான். இவனே இரண்டாம்

இராசேந்திரன் என்று அடையாளம் காணப்படுபவன் ஆவான். இவனுக்குப் பிறகும் மூன்று பேர் சோழ பாண்டியர்களாகப் பட்டம் எய்தி ஆண்டனர். கி.பி. 1070 வரையிலும் இம்முறை பின்பற்றப்பட்டது. வலுவிழந்த பாண்டியர்கள் அவ்வப்போது தங்களது படைகளை வலுப்படுத்தி, சேர, ஈழ மன்னர்களுடைய உதவியுடன் சோழர்களை எதிர்த்து வந்தனர். இராசேந்திரன் மதுரை நகரில் ஓர் அரண்மனை கட்டினான்.

சோழ பாண்டியர்களின் ஆட்சியில் திருநெல்வேலிப் பகுதியில் பல கோயில் பணிகள் செய்யப்பட்டுள்ளன. திருவாலீசுவரம் கோயில் சோழர் கலைப் பணிக்கு மிகச் சிறந்த எடுத்துக்காட்டாய் இப்பகுதியில் திகழ்கிறது. விருதுநகர் மாவட்டம் ஆவியூரில் இராசேந்திர சோழன் பெயராலேயே ஒரு சிவன் கோயில் கட்டப்பட்டுள்ளது. முதலாம் இராசராசனுடைய கல்வெட்டுகள் அழகர்கோயில், தென்கரை ஆகிய இடங்களில் காணப்படுகின்றன. பாண்டிய நாட்டில் முதலாம் குலோத்துங்கன் காலம் வரை சோழர் கல்வெட்டுகள் மிகுதியாக உள்ளன.

பாண்டியர்கள் அவ்வப்போது வாரிசுரிமைப் போரில் ஈடுபட்டு அமைதியைக் குலைத்தனர். ஒரு பிரிவினர் இலங்கை அரசர்களின் உதவியை நாடுவதும் மற்றொரு பிரிவினர் சோழர் உதவியை நாடுவதும் மாறிமாறி நடைபெற்றது. யாரிடமும் விசுவாசம் காட்டாத பாண்டியர்கள் அடிக்கடி போர்களைச் சந்திக்க வேண்டியவர்களாகவே இருந்தனர்.

மூன்றாம் குலோத்துங்கன் காலம் வரைக்கும் சோழர்கள் பாண்டிய நாட்டில், குறிப்பாக மதுரைப் பகுதியில் செல்வாக்கோடு விளங்கினர். மூன்றாம் குலோத்துங்கனின் குடுமியான்மலைக் கல்வெட்டுக் கீழ்க்கண்டவாறு அமைகிறது.

பாண்டி மண்டலத்தைச் சோழ பாண்டியன்
மண்டலம் என்று எழு பாரும் செல்ல நிறுத்தி
மல்லவைய மதுரையையும் மதுரை யென்ற பேரொழிதுல்
சொல்ல முடித்தலை கொண்ட சோழபுரம் என்றருளி
..................
திருவாலவாயிலில் அமர்ந்தவர்க்குதன் பேரால்
சிறந்த பெருந்திரு வீதியும் திருநாளும் கண்டருள
உருத்திரருடனே சிலையால்முப்புரம் எரித்த
சொக்கர்க்கு திருப்பவனி கண்டருளி திருவீதியில்
சேகரித்து தென்மதுரை திருவால வாய்ப் பொன்மலை
என்ப பொன் மேய்ந்து

*இக்கல்வெட்டு கி.பி. 1212 ஆம் ஆண்டிற்குரியது. (ஆட்சியாண்டு 34) இதன் மூலம் மூன்றாம் குலோத்துங்கன் காலம் வரையிலும் மதுரை சோழர் வசம் இருந்தது பெறப்படும். குலோத்துங்கன் மதுரை நகரின் பெயரையே முடிகொண்ட சோழபுரம் என மாற்றினான். தன் பெயரால் திருவீதி அமைத்தான்.இறைவனைத் திருவீதி உலா வரச் செய்து தான் வீதியில் நின்று வணங்கினான். மதுரைக் கோயிலுக்குப் பொன் வேய்ந்தான் என்பதிலிருந்து குலோத்துங்கனின் ஆழ்ந்த பக்தி புலப்படும்.*

*முதலாம் சடையவர்மன் குலசேகரன் (1190-1216) காலம் முதல், சோழரிடமிருந்து விடுதலை பெற்றுத் தனிநாடாகப் பாண்டிய நாடு ஆளப்பட்டது. முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் (1216 - 1238) அதே சோழர்களை வென்று சோழ நாட்டைக் கைப்பற்றி சோழ நாடு கொண்டருளிய சுந்தர பாண்டியன் என்ற சிறப்புப் பெயரும் பெற்றான். இவன் காலம் முதல் சோழர் ஆதிக்கம் பாண்டிய நாட்டில் முடிவுக்கு வந்தது.*

# 6. பிற்காலப்பாண்டியர் எழுச்சி

மதுரையைத் தலைநகராமாகக் கொண்ட பாண்டிய மண்டலம் முதலாம் இராசராசனாலும் அவன் மகன் இராசேந்திரனாலும் கையகப்படுத்தப்பட்டு அவர்களது நேரடி பிரதிநிதிகளால் ஆளப்பட்டது. அதே நேரத்தில் நாட்டை இழந்த பாண்டியர்களும் முற்றிலும் இப்பகுதியை விட்டு அகன்றுவிடவில்லை. தொடர்ந்து சிறுசிறு நிலப் பகுதிக்குத் தலைவர்களாக இருந்து மீண்டும் இழந்த ஆட்சியைப் பெற காலங்கருதிக் காத்திருந்தனர். அத்தகைய பாண்டிய சிற்றரசர்கள் சிலரை அறிந்து கொள்வது நன்மை பயக்கும்.

### ஜடாவர்மன் உடையார் ஸ்ரீவல்லபன்

(கி.பி. 1014-1031) இவன் கி.பி. 1014இல் நெல்லை மாவட்டப் பகுதிகளில் இருந்தவன். இவனது கல்வெட்டுகள் நெல்லை மாவட்டத்தில் சேரமாதேவி, ஆத்தூர், திருவாலீஸ்வரம், திருக்கோவிலூர் ஆகிய ஊர்களில் காணப்படுகின்றன. இவன் 17 ஆண்டுகள் ஆட்சி செய்துள்ளான். தொடக்கத்தில் சோழர்களோடு நல்லுறவோடு இருந்தான். 1021-22 வாக்கில் இவன் சோழர் களால் மதுரையை விட்டு விரட்டப்பட்டு வாழ்க்கையின் இறுதிகாலத்தில் திருநெல்வேலிப் பகுதிகளில் கழித்தான். 'திருமகள் சயமகள் திருப்புயத் திருப்ப' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி இவனுக்குரியது.

## ஜடாவர்மன் ஸ்ரீவல்லப பாண்டியன்

*(கி.பி. 1101-1124) 'திருமடந்தையும் ஜயமடந்தையும் திருப்புயங்கள் இனிதிருப்ப' எனத் தொடங்கும் இவனது மெய்க்கீர்த்தி. இவன் முதலாம் குலோத்துங்க சோழனின் சமகாலத்தவன். அவனுக்கு அடங்கிய சிற்றரசன். கி.பி.1124 வரை ஆட்சி செய்தான். மதுரை இவனது தலைநகராய் இருந்தது. இவனது மகன் மானாபரணன் என்னும் சுந்தரபாண்டியன் ஆவான். கட்டாரிமங்கலம், ராஜசிங்க மங்கலம், தென்கரை, குருவித்துறை, விஜயநாராயணம் ஆகிய ஊர்களில் இவன் காலத்தியக் கல்வெட்டுகள் காணக்கிடைக்கின்றன. இவனுக்குப் பின் மானாபரணன் என்ற சுந்தர பாண்டியன் கி.பி. 1104-1131 வரை ஆட்சி செய்தான்.*

## பஞ்சபாண்டியர்கள் யார்?

*முதலாம் குலோத்துங்க சோழனின் 14ஆம் ஆட்சியாண்டு கல்வெட்டு ஒன்று அவன் ஐந்து பாண்டியர்களை (பஞ்சபாண்டியர்) வென்றதாகக் கூறுகிறது. இந்த ஐந்து பாண்டியர்கள் யார் யார் என்பது அக்கல்வெட்டில் விளக்கமாக இல்லை. இவர்களில் வீரபாண்டியன், வீரகேசரி, குலசேகரன், பராக்ரமன் என்ற நான்கு பாண்டிய சிற்றரசர்கள் அடங்குவர் என்பது சில வரலாற்றாசிரியர்களின் கருத்து. ஐந்தாவது பாண்டியன் கேரளப்பகுதியில் சிற்றரசனாக இருந்திருக்கலாம் என்றும் கூறுவர். இப்பஞ்சபாண்டியர்களைக் குலோத்துங்கன் வென்றது கி.பி. 1084இல் என்பது அறியத்தக்கது.*

## ஜடாவர்மன் ஸ்ரீவல்லப பாண்டியன் (கி.பி. 1131-1144)

*இவன் ஆட்சிக்கு வந்த ஆண்டு கி.பி. 1131 'பூமாது புனர' எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தி இம்மன்னனுக்குரியது. இவனது கல்வெட்டுகள் மதுரைக்கு அருகில் உள்ள ஆனையூர், விருதுநகர் மாவட்டத்தில் வேம்பத்தூர், நெல்லை மாவட்டத்தின் கடையநல்லூர் ஆகிய ஊர்களில்*

உள்ளன. ஆனையூரிலுள்ள கல்வெட்டு இவனது இரண்டாம் ஆட்சியாண்டில் இருந்த காவனூர் கிழவன் திருவொற்றியூர் தேர் பொலிய நின்றான் என்று ஒரு அதிகாரியைக் குறிக்கிறது.

## பிறபாண்டிய சிற்றரசர்கள்

மேலே குறிப்பிடப்பட்டவர்கள் தவிர இன்னும் சில பாண்டிய மன்னர்கள் இக்காலத்தில் இருந்து சிறுசிறு பகுதிகளை நிர்வகித்து வந்துள்ளனர். அவர்களில் மாறவர்மன் பராக்கிரம பாண்டியன் (கி.பி. 1143), மாறவர்மன் ஸ்ரீவல்லப பாண்டியன் (கி.பி. 1145) சடாவர்மன் குலசேகரபாண்டியன் (கி.பி. 1162), பராக்கிரமபாண்டியன் (கி.பி. 1164) சடாவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1170) மாறவர்மன் விக்கிரம பாண்டியன் (கிபி. 1181) ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

## பாண்டியரின் உட்பகை

மேலே கூறப்பட்ட பாண்டிய சிற்றரசர்களில் சடாவர்மன் குலசேகரபாண்டியனுக்கும் (கி.பி. 1162), பராக்கிரம பாண்டியனுக்கும் (கி.பி. 1164) இடையே பெரும்போர் மூண்டது. குலசேகரன் தென்காசி பகுதியிலும் பராக்கிரமபாண்டியன் மதுரையிலும் ஆண்டனர். இப்போரில் பராக்ரம பாண்டியன் கொல்லப் பட்டான். மதுரையும் குலசேகரன் ஆட்சிக்குட்பட்டது. போரில் மாண்ட பராக்ரம பாண்டியனின் மகன் வீரபாண்டியன் ஈழமன்னன் பராக்ரமபாகுவின் உதவியை நாடினான். அவனும் லங்காபுரி தண்டநாயகன், ஜகதராயன் என்னும் இரண்டு படைத்தலைவர்களின் கீழ் படையை அனுப்பினான். அப்படைத்தலைவர்கள் குலசேகரனை வென்று மதுரையை மீட்டு வீரபாண்டியனை மதுரைக்கு அரசனாக்கினர். கி.பி. 1170இல் இந்நிகழ்வு நிகழ்ந்தது.

ஆனால் அப்போரில் தோற்ற குலசேகரன் சோழமன்னன் இரண்டாம் இராசாதிராசனின் உதவியை

நாடினான். அவனது படைத்தலைவன் பெருமான் நம்பி பல்லவராயனின் தலைமையில் ஈழப்படைகளையும், வீரபாண்டியனையும் வென்று மீண்டும் மதுரையைப் பிடித்தான் குலசேகரன். இது கி.பி. 1172இல் நிகழ்ந்தது. இக்குலசேகரன் ஈழப்படைகளோடு ரகசிய உடன்பாடு கொண்டு சோழனுக்குத் துரோகம் இழைத்ததால் வெகுண்ட இராசாதிராசன் தன் படைத்தலைவன் அண்ணன் பல்லவரையனை அனுப்பி குலசேகரனை மதுரையை விட்டுத் துரத்தினான். கி.பி. 1177இல் இது நிகழ்ந்தது. மதுரையில் இருந்து விரட்டப்பட்ட குலசேகரன் கள்க்குடி என்னும் உக்கிரன் கோட்டையில் தங்கி ஆண்டான். கி.பி. 1178க்குப் பின் அவனது வரலாறு என்னவென்பது புலப்படவில்லை. இராசாதிராசனுக்குப் பின் சோழ அரியணை ஏறிய மூன்றாம் குலோத்துங்கன் பாண்டி நாட்டில் வீரபாண்டியனைத் தோற்கடித்து குலசேகரனின் மகன் விக்கிரமபாண்டியனை கி.பி.1186இல் மதுரைக்கு மன்னனாக்கினான். வீரபாண்டியன் மீண்டும் 1187லும் தோற்கடிக்கப்பட்டான்.

விக்கிரம பாண்டியனுக்குப் பின்னர் அவன் மகன் சடாவர்மன் முதலாம் குலசேகரன் கி.பி.1190 முதல் ஆட்சி செய்தான். ஆனால் அவனுக்கும் மூன்றாம் குலோத்துங்கனுக்கும் இடையே சுமுகமாக உறவு இல்லை. சோழனுக்கு அடங்கிய சிற்றரசனாகவே முதலாம் குலசேகரன் ஆட்சி செய்தான். இவனது கல்வெட்டுகள் பல பாண்டிய நாட்டுப் பகுதிகளில் காணக் கிடைக்கின்றன.

## இரண்டாம் பாண்டியப் பேரரசு

விக்கிரமபாண்டியனின் மகன்கள் இருவர். முதலாமவன் ஜடாவர்மன் முதலாம் குலசேகரன். இவன் கி.பி. 1190 முதல் 1116 வரை பாண்டிய நாட்டின் மன்னனாக ஆட்சி புரிந்தான். ஆனால் சோழ அரசன் மூன்றாம் குலோத்துங்கனின் ஆதிக்கம் தொடர்ந்து நீடித்தது. எனவே சோழனுக்கு அடங்கிய சிற்றரசனாகவே இவன் ஆண்டான்.

இவனது கல்வெட்டு 'பூவின் கிழத்தி' எனும் மெய்க்கீர்த்தியுடன் தொடங்கும். இவன் காலக்கல் வெட்டுகள் மதுரை, இராமநாதபுரம், நெல்லை மாவட்டங்களில் காணப்படுகின்றன. திருப்பத்தூர், சேரன்மாதேவி, சேத்தூர், வேம்பத்தூர், அழகர்கோயில், இராசபாளையம், ஆத்தூர், பெருங்குளம் ஆகிய ஊர்களில் கிடைத்துள்ளன. இவன் தன் தம்பி முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனுக்கு கி.பி. 1216இல் முடி சூட்டினான். கி.பி. 1224க்குப் பின் இவனது இறுதிக்காலம் என்ன என்பது தெளிவாகவில்லை.

## முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. (1216 - 1238)

சோழர்களின் கீழ்ப்பணிந்து ஆண்ட பாண்டிய அரசர்களின் சிறுமை போக்க வந்த சிறுத்தை சுந்தரபாண்டியன் எனில் அது மிகையாகாது. கி.பி. 1216இல் முடி சூடிய இம்மன்னன் மூன்றாண்டுகள் வரையில் சோழர்களுக்கு அடங்கியே இருந்தான். 1218இல் மூன்றாம் குலோத்துங்கன் இறந்துவிடவே அவனது மகன் மூன்றாம் இராசராசன் சோழ அரியணை ஏறினான். இவனது திறமையற்ற ஆட்சியால் சோழப் பேரரசு வலுவிழந்தது. காலங்கருதியிருந்த விடுதலை வேட்கை மிக்க சுந்தரபாண்டியன் சோழநாட்டின் மீது படையெடுத்துச் சோழனை வென்று தனது பாண்டிய நாட்டில் சுயாட்சியை நிலைபெறச் செய்தான். இது நிகழ்ந்தது கி.பி. 1219இல் எனலாம். சோணாடு கொண்டருளிய தேவர் என இதன் மூலம் அவன் பெயர் பெற்றான். மீண்டும் அந்நாட்டை இராசராசனுக்கே திருப்பி அளித்ததன் மூலம் 'சோணாடு வழங்கியருளிய தேவர்' என்ற பெயரையும் பெற்றான். இப்போரின் போது சுந்தரபாண்டியன் சோழநாட்டின் தஞ்சை, உறந்தை ஆகிய நகரங்களைத் தீக்கிரையாக்கினான்.

தஞ்சையும் உறந்தையும் தெந்தழல் கொளுத்தி, கூடமும்
மாமதிலும் கோபுரமும் ஆடரங்கும், மாடமும் மாளிகையும்

மண்டபமும் பலவிடித்து செம்பியனைச் சினமிரியப் பொருது
சுரம்புக வோட்டி'

என்ற அவனது மெய்க்கீர்த்திப் பகுதி பாண்டியனது சோழநாட்டு வெற்றியைக் கூறும். சுந்தரபாண்டியன் இரண்டாம் முறையாகவும் சோழநாட்டின் மீது படையெடுத்து முழுவதுமாக அந்நாட்டை தன்னடிப் படுத்தினான். இது கி.பி. 1221இல் நிகழ்ந்தது. அதன் பின் சோழ அரசு பாண்டியர்க்குக் கட்டுப்பட்டே செயல்பட்டது எனலாம்.

சுந்தரபாண்டியன் சோழரை வென்று குடந்தைக்கு அருகில் உள்ள பழையாறை ஆயிரத்தளியில் வீராபிசேகம் செய்து கொண்டான். அங்கிருந்து சிதம்பரம் சென்று நடராசப் பெருமானை வழிபட்டான். பின்னர் மதுரை திரும்பும் வழியில் பொன்னமராவதி அரண்மனையில் தங்கியிருந்தான். அப்போது தோற்ற சோழன் தன் மகனுடன் அங்கு வந்து சந்தித்து இழந்த நாட்டைப் பாண்டியனிடமிருந்து கொடையாகப் பெற்றான்.

இச்சுந்தரபாண்டியன் சோழநாட்டு வெற்றிக்குப் பிறகு கேரளத்தையும் வென்றான். அவனது இறுதிக் காலம் வரை பாண்டிய நாட்டில் சிறப்பான அமைதியான ஆட்சியை நடத்தினான். கி.பி. 1244 வரை அவன் உயிருடன் இருந்தான் எனலாம். இவனது மெய்க்கீர்த்தி 'பூமருவிய திருமடந்தையும்' என்று தொடங்கும்.

இச்சுந்தரனுக்குப் பிறகு சடாவர்மன் குலசேகரன் என்னும் மன்னன் சில மாத காலம் ஆட்சிபுரிந்தான். அவன் தொடர்பான செய்திகளை அறிந்து கொள்ளத்தக்க ஆவணங்கள் எதுவும் நமக்குக் கிடைக்கவில்லை. பின்னர் இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் அரசு கட்டில் ஏறினான்.

## இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1238-1255)

இம்மன்னன் கி.பி. 1238இல் அரசு கட்டில் ஏறினான். 'பூமலர் திருவும்' எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தி இவனுக்குரியது. இவன் காலத்தில் பாண்டி நாட்டின் மீது சோழன் மூன்றாம் இராசேந்திரன் படையெடுத்துச் சில பகுதிகளை வென்றான். இப்போரில் பாண்டியனுக்கு உதவியாக போசள மன்னன் வீரசோமேஸ்வரன் வந்தான். இச்சோமேஸ்வரனைச் சுந்தரபாண்டியன் 'மாமாடி' என்று உறவு கொண்டாடினான். போசளர்கள் சோழருடனும், பாண்டியருடனும் மண உறவு கொண்டிருந்தனர். சந்தர்ப்பத்திற்குத் தக்கவாறு ஒருவரை ஆதரித்தும், ஒருவரை எதிர்த்தும் தங்களது செல்வாக்கை வளர்த்துக் கொண்டனர். சுந்தரபாண்டியன் கொங்குச் சோழர் களுடனும் நல்லுறவு கொண்டிருந்தான். கொங்குச் சோழமன்னன் விக்கிரம சோழனை சுந்தரபாண்டியன் 'மச்சுனன்' என உறவு கொண்டாடியதைத் திருநெல்வேலிக் கல்வெட்டு ஒன்று குறிப்பிடுகிறது. இவனது ஆட்சிக்காலம் கி.பி. 1255 வரைத் தொடர்ந்தது. இவனது அண்ணன் இரண்டாம் சடாவர்மன் குலசேகரன். இவன் கல்வெட்டு களில் பெரிய நாயனார் என்று குறிப்பிடப்படுகிறான்.

## முதலாம் ஜடாவர்மன் விக்கிரம பாண்டியன்

இவன் இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் தம்பி எனக் கருதப்படுகிறான். கி.பி. 1241இல் ஆட்சிக்கு வந்துள்ளான். கி.பி. 1247 வரை உயிருடன் இருந்தான். எனத் தெரிகிறது. இன்னும் போசளமன்னன் வீரசோமேஸ் வரனை தன் மாமாடி எனக் கூறிக் கொள்கிறான். இவ்விக்கிரம பாண்டியனின் காலத்திய நான்கு கல்வெட்டுகள் மதுரை மீனாட்சி அம்மன் கோயிலில் உள்ளன.

## முதலாம் ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1251-1284)

இரண்டாம் பாண்டியப் பேரரசின் தலைசிறந்த மன்னன் இவனே என்பர் வரலாற்றாசிரியர்கள். இவனும் இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் இளைய சகோதரனே என்பர். இவனது ஆட்சியில் பாண்டியர் ஆதிக்கம் தமிழகமெங்கும் பரவியது மட்டுமன்றி ஆந்திரப்பகுதியில் நெல்லூர் கடப்பை வரையும் பரவியது. மலைநாடும் கொங்குநாடும் பாண்டியரின் கீழ் வந்தன. 'எம் மண்டலமும் கொண்டருளிய சுந்தரபாண்டிய தேவர்' என்ற சிறப்புப் பெயரையும் இம்மன்னன் பெற்றான்.

இவனது மெய்க்கீர்த்தி 'பூமலர்வளர் திகழ்' என்று தொடங்குகிறது. இவனது வெற்றிக்கு உறுதுணையாக இவனது சகோதரர்களும், உறவினர்களும் இருந்தனர். முதலில் இவன் சேரனை வென்று மலைநாட்டைக் கைப்பற்றினான். சோழன் மூன்றாம் ராசேந்திரனை வென்று அவனிடம் திறைபெற்றான். இவன் காலத்திலேயே சோழ அரசு முற்றிலும் அழிந்தது. சோழர்களுக்கு உதவியாக இருந்த போசளர்களையும் போரிட்டு வென்றான் பாண்டியன். கண்ணனூர் கொப்பத்தில் நடைபெற்ற இப்போரில் போசளமன்னன் வீரசோமேஸ்வரனும் கொல்லப்பட்டான்.

பின்னர் சுந்தரபாண்டியன் காடவர்கோன் கோப்பெருஞ் சிங்கனை வென்றான். அவனிடமிருந்து திறையாகப் பெற்ற பொன்னால் திருவரங்கம் கோயிலில் பல அரும்பணிகள் செய்தான். பின்னர் கொங்கு நாட்டையும், சேலம் பகுதியான மகதை மண்டலத்தையும் வென்றான். அவனது கவனம் பின்னர் காஞ்சிபுரத்தின் பக்கம் திரும்பியது. இங்கு அரசனாக இருந்த தெலுங்குச் சோழன் விசயகண்ட கோபாலனை வென்றான். பின் நெல்லூர் வரை சென்று காகதிய மன்னன் கணபதியையும் வென்று வீராபிசேகம் செய்து கொண்டான்.

திருவரங்கத்திலும், தில்லையிலும் விமானங்களுக்குப் பொன்வேய்ந்தான். இதனால் 'கோயில் பொன் வேய்ந்த பெருமாள்' எனச் சிறப்புப்பெயர் பெற்றான். எம்மண்டலமும் கொண்டருளியவன் என்ற சிறப்பு பெயரைப் பெற்றதோடு 'எல்லாந் தலையானான்' என்ற சிறப்புப் பெயரால் செப்புக் காசுகளையும் வெளியிட்டான். மதுரை மீனாட்சி அம்மன் கோயிலின் கிழக்குக் கோபுர வாயிலைக் கட்டியவன் இம்மன்னனே. அழகர்கோயிலிலும் மண்டபம் ஒன்று கட்டிக் கோவில் பொன் வேய்ந்த பெருமான் மண்டபம் எனத் தன் சிறப்புப் பெயரைச் சூட்டினான்.

இரண்டாம் சடையவர்மன் குலசேகரன், இரண்டாம் மாறவர்மன் விக்கிரம பாண்டியன் ஆகியோர் இம்முதலாம் சடையன் சுந்தரபாண்டியனின் சகோதரர்கள் ஆவர். பிற்காலப் பாண்டிய அரசர்களிலேயே பெயரும் புகழும் பெற்ற இம்மன்னன் 1281 வரை அரசாண்டான் என்பர்.

## முதலாம் சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1253 – 1283)

இவன் கி.பி. 1253இல் ஆட்சிக்கு வந்தவன். இவன் முதலாம் சடையன் சுந்தரனுக்குத் துணையாக நின்று அவனது வெற்றிப் போர்களில் எல்லாம் உடன் இருந்திருக்கிறான். அவ்வெற்றிகளையும் தனது வெற்றிகளாகக் கூறிக் கொள்கிறான். இவனது கல்வெட்டுகள் நெல்லை, மதுரை, இராமநாதபுரம், புதுக்கோட்டை மாவட்டங்களில் கிடைக்கின்றன. 'திருமகள் வளர' என இவன் மெய்க்கீர்த்தி தொடங்கும். 'கொங்கு ஈழம் கொண்டவன்' என்று சிறப்பாகக் கூறிக்கொள்வான். இவன் சுந்தரபாண்டியனுடன் சேர்ந்தே ஆட்சி புரிந்தான் எனக் கொள்வர் வரலாற்றறிஞர். இதே காலத்தில் இன்னொரு வீரபாண்டியனும் இருந்துள்ளான். இவனை இரண்டாம் சடையவர்மன் வீரபாண்டியன் எனக் கூறுவர். 1254 முதல்

*1265 வரை வாழ்ந்தவன். 'திருமகள் வளர் முலை' என்று இவனது மெய்க்கீர்த்தி தொடங்கும்.*

## முதலாம் மாறவர்மன் குலசேகரன் (கி.பி. 1268-1318)

*'தேர்போல் அல்குல்' எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தி இவனுக்குரியது. இவன் முதலாம் சடையவர்மன் சுந்தரனின் மகன். தந்தை வென்று விரிவுபடுத்திய பாண்டிய அரசினை அப்படியே கட்டிக் காத்தான். எதிர்த்த கேரள மன்னர்களை வென்றான். எனவே கொல்லங் கொண்டான் என்ற பெயரும் பெற்றான். தந்தையைப் போலவே 'எம்மண்டலமும் கொண்டருளிய' என்ற சிறப்புப் பெயரையும் சூடிக் கொண்டான். 40ஆண்டுகளுக்கும் மேலாகச் சிறப்பான ஆட்சியை இவன் நடத்தினான். பல அறப்பணிகள் கோயில் திருப்பணிகள் நடைபெறக் காரணமாகவிருந்தான். திருநெல்வேலி நெல்லையப்பன் கோயில் திருச்சுற்று மாளிகையை இவன் கட்டினான். திருப்பரங்குன்றத்தில் 1371இல் அம்மன் கோயிலையும் கட்டினான். இவனுக்குப் பின் வந்த இவன் மகன்களாலும் பிறராலும் பாண்டிய நாட்டை ஒற்றுமையுடன் ஆள முடியவில்லை.*

# 7. போசளர்களின் செல்வாக்கு

போசளர்கள் கன்னட நாட்டில் துவார சமுத்திரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்தவர்கள். மூன்றாம் இராசராசன் என்னும் சோழ மன்னனுக்குப் போசள மன்னன் வீரநரசிம்மனின் ஒரு மகள் மணமுடிக்கப் பட்டுள்ளாள். இதுபோல் வீரநரசிம்மனின் இன்னொரு மகளைப் பாண்டிய மன்னன் ஒருவன் மணந்துள்ளான். இம்மண உறவுகளின் காரணமாகப் போசளர்கள் தமிழ்நாட்டு அரசியலிலும் ஆர்வம் காட்டி வந்தனர்.

இந்நிலையில் சோழன் மூன்றாம் இராசராசன் பாண்டியர்களால் நாடிழந்து கன்னட வேந்தர்களின் உதவி பெறும் பொருட்டு வடக்கு நோக்கிச் சென்ற போது காடவர் குலத்தலைவன் கோப்பெருஞ்சிங்கனால் சிறைபிடிக்கப்பட்டு சேந்தமங்கலத்தில் சிறை வைக்கப் பட்டான். இதனை அறிந்த போசளன் வீரநரசிம்மன் தனது தண்ட நாயகர்களின் தலைமையில் படை அனுப்பி இராசராசனை சிறைமீட்டான். அது மட்டுமின்றித் தானே பாண்டியனுடன் நேரில் சண்டையிட்டு சோழநாட்டை மீட்டு இராசரானுக்கு வழங்கி இறுதிவரை ஆளத் துணை புரிந்தான். இதனால் மூன்றாம் ராசேந்திரன், வீர நரசிம்மனின் மகனான வீரசோமேஸ்வரனை மாமன் என்று தன் கல்வெட்டுகளில் குறிப்பிடுகிறான்.

சோழர்க்கும் பாண்டியர்க்கும் உறவினர்களாகி விட்ட போசளர்கள் தமிழ்நாட்டு அரசியலில் இடம் பெறும் நோக்கத்தில் திருச்சிக்கு அருகில் கண்ணனூரைத் தலைநகராகக் கொண்டு அச்சிறு பகுதியை ஆளத் தொடங்கினர். தங்களை வலுப்படுத்திக் கொண்ட பின்னர்

கி.பி. 1234இல் வீரசோமேஸ்வரன் பாண்டியர்களை வென்று 20 ஆண்டு காலம் தனது ஆதிக்கத்தை நிலை நாட்டினான்.

வீரநரசிம்மன் 'சோழ மண்டல ஸ்தாபனாச்சாரியன்' என்றும் சர்ப்பம் போன்ற பாண்டியர்களுக்கு கருடன் போன்றவன் என்றும் தன்னுடைய கன்னட கல்வெட்டுகளில் கூறிக் கொள்கிறான். வீர சோமேஸ்வரன் இராமேஸ்வரம் வரை சென்றான். தனது படைத் தலைவர்களைப் பாராட்டி அங்கங்கு கிராமங்களைக் கொடை அளித்தான்.

பாண்டியர் கல்வெட்டுகள் பலவும் வீரசோமேஸ் வரனின் பாண்டி நாட்டு ஆதிக்கத்தை உறுதிப்படுத்து கின்றன. இளையான்குடி, சதுர்வேதிமங்கலம் ஆகிய ஊர்களில் கிடைக்கும் கல்வெட்டுகள் போசளர்களுக்குப் பாண்டியர்கள் திறை செலுத்தியதைக் கூறுகின்றன. வீரசோமேஸ்வரனும், அவன் மகன் நரசிம்மனும் பாண்டிய அரசர் குலப் பெண்களை மணந்து கொண்டனர். பாண்டியர்கள் சோமேஸ்வரனை மாமாடி என்று கல்வெட்டுகளில் குறிப்பிட்டுள்ளனர்.

மதுரை மீனாட்சி அம்மன் கோயிலில் கிடைக்கும் இரண்டு கல்வெட்டுகள் சடையவர்மன் விக்கிரம பாண்டியனின் 6ம் ஆண்டுக்குரியவை (கி.பி. 1245) இக்கல்வெட்டுகளில் மாமாடியான வீரசோமேஸ்வரன் பிராமணர்களுக்கும், திருவேடகம் கோயில் கோசாலைக்கும் மடங்களுக்கும் நிலங்கள் அளித்தமையும் அவற்றைப் பாண்டியன் இறையிலியாக்கினான் என்றும் கூறப்படுகிறது. அழகர்கோயிலில் கிடைக்கும் கல்வெட்டு ஒன்று வீரசோமேஸ்வரன் 10ஆம் ஆட்சி ஆண்டைச் (கி.பி. 1245) சேர்ந்தது. இதில் இக்கோயில் அமுதுபடி, சாத்துப்படிக்காக நிலங்கள் கொடையளித்தான் என்று கூறப்பட்டுள்ளது. கி.பி. 1249ஆம் ஆண்டைச் சேர்ந்த பாண்டியன் கல்வெட்டொன்று அழகர்கோயிலில் வீரசோமேஸ்வரன் பெயரில் சந்தி ஒன்று ஏற்படுத்தப்பட்டு,

அதற்கென இறையிலியாக நிலங்கள் வழங்கப்பட்டன என்றும் கூறுகிறது.

மதுரை மீனாட்சி அம்மன் கோயிலில் கி.பி. 1248இல் மாமாடி வீரசோமேஸ்வரன் பெயரால் அவன் பிறந்த நட்சத்திரத்தில் சிறப்பு வழிபாடும், விழாவும் செய்து இறைவன் தீர்த்தமாட சுந்தரபாண்டியன் இறையிலியாக நிலங்கொடுத்தான் என்று கூறுகிறது. மதுரையிலிருந்தும் அழகர்கோயிலிலிருந்தும் கிடைக்கும் கல்வெட்டுகள் மதுரை மண்ணிலேயே வீரசோமேஸ்வரன் மேலாதிக்கம் செலுத்தியதையும் பாண்டிய மன்னன் சுந்தரபாண்டியன் போன்றோர் பணிந்து ஆண்டனர் என்பதையும் காட்டுகின்றன. திருமெய்யம், திருநெல்வேலி, ஆத்தூர் போன்ற இடங்களிலும் போசளர்களின் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. சோமேஸ்வரன் கி.பி. 1262இல் பாண்டிய மன்னன் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனால் தோற்கடிக்கப்பட்டு மாண்டான். அவனது மறைவுடன் போசளர் ஆட்சி இப்பகுதியில் முடிவுக்கு வந்தது.

# 8. சுல்தானியர் ஆட்சி

முதலாம் மாறவர்மன் குலசேகரனின் (கி.பி. 1268-1318) மகன்களான வீரபாண்டியனும், சுந்தரபாண்டியனும் அரசுரிமைப் போரில் ஈடுபட்டனர். தனக்குப் படை உதவி வேண்டி சுந்தரபாண்டியன் டெல்லி ஆட்சியாளர்களை நாடினான். அப்போது டெல்லியின் தலைவன் அலாவுதீன் கில்ஜி சுந்தரபாண்டியனுக்கு ஆதரவாக மாலிக்காபூரின் தலைமையில் படையை அனுப்பினான். பிளவுபட்டுக் கிடந்த பாண்டிய நாட்டையும் முழுமையாகத் தென்னகத்தையும் தன் வசப்படுத்த எண்ணிய மாலிக்காபூர் வாய்ப்பை நன்கு பயன்படுத்திக் கொண்டு அனைத்துப் பகுதிகளையும் வென்றான். அமீர்குஸ்ரு எனும் கவிஞனின் காலக் குறிப்பின்படி மாலிக்காபூர் 13.4.1311 அன்று மதுரை நகரைக் கைப்பற்றினான் என அறிகிறோம்.

மாலிக்காபூரின் படை எடுப்பை முன்னரே அறிந்து கொண்ட மன்னன் வீரபாண்டியன் தன் அரசியருடன் மதுரையைவிட்டு ஓடிவிட்டான். மாலிக்காபூர் பாண்டியன் அரண்மனையைக் கொள்ளையிட்டதுடன், சொக்கநாதர் கோயிலுக்கும் தீயிட்டான். ஏராளமான செல்வங்களைக் கொள்ளை கொண்ட மாலிக்காபூர் அவற்றை டெல்லிக்குக் கொண்டு சென்று அலாவுதீன் கில்ஜியின் முன்பாக வைத்தான். மாலிக்காபூரை விரும்பி அழைத்து வந்த சுந்தரபாண்டியனுக்கும் ஏமாற்றமே மிஞ்சியது.

இந்த நேரத்தில் பாண்டியச் சகோதரர்களின் உட்பூசலைப் பயன்படுத்திக் கொண்ட தென்திருவாங்கூரை

ஆண்ட இரவிவர்மன் குலசேகரன், பாண்டிய நாட்டைக் கைப்பற்றிக் காஞ்சிபுரம்வரை தனது ஆளுகையை விரிவுபடுத்தினான். சுந்தரபாண்டியன், வீரபாண்டியன் ஆகிய இருவரையும் தான் வென்றதாக இரவிவர்மன் கூறிக் கொள்கிறான். இச்சூழலில் சுந்தரபாண்டியன் காகதீய மன்னன் இரண்டாம் பிரதாப ருத்ரனின் உதவியை நாடினான். முப்பிடி நாயக்கன் என்னும் காகதீய படைத் தலைவனால் கேரள அரசன் பாண்டிய நாட்டைவிட்டு துரத்தப்பட்டான்.

மாலிக்காபூர் படை எடுத்த பத்து ஆண்டுகளுக்குப் பிறகு, குத்புதீன் முபாரக்ஷாவின் படைத்தலைவன் குருகான் தென்னகத்தை நோக்கிப் படையுடன் அனுப்பப்பட்டான். மழையின் காரணமாக அவனது முயற்சி தடைப்பட்ட போதும் அடுத்தடுத்த படை எடுப்புகளின் காரணமாகப் பாண்டியர் ஆட்சி முற்றிலும் அழிந்தது. துக்ளக் அரசனின் ஆட்சியில் மதுரைப் பகுதி முற்றிலும் வெல்லப்பட்டு டெல்லி அரசாங்கத்திற்குக் கட்டுப்பட்ட ஒரு மாநிலமாக இணைக்கப்பட்டது. கியான்சுதீன் துக்ளக் தன் மகனும் வாரிசுமான உல்லுகான் என்பவனைப் படையுடன் அனுப்பித் தென்னகத்தை வெற்றி கண்டான். அப்போதைய பாண்டிய அரசன் சடாவர்மன் பராக்ரம பாண்டியன் கைதியாக டெல்லிக்குக் கொண்டு செல்லப்பட்டான். கி.பி.1323 முதல் 1334 வரை மதுரைப் பகுதி டெல்லி சுல்தான்களின் நேரடி ஆட்சியில் அடங்கி அவர்களால் நியமிக்கப்பட்ட ஆளுநர்களால் நிர்வகிக்கப்பட்டது. கியாசுதீன் துக்ளக் அவன் மகன் முகமது பின் துக்ளக் ஆகியோரின் ஆட்சியில் சுமார் 10 ஆண்டுகாலம் (1326-1335) மதுரை இருந்தது. அதன் பின் மதுரை சுல்தான்கள் எனத் தனியாக ஒரு குழுவினர் தங்களைச் சுயாதிகாரம் பெற்றவர்களாக அறிவித்துக் கொண்டு மதுரையை ஆண்டனர்.

1. ஜலாலுதீன் அசன்ஷா (கி.பி. 1335–40)
2. அலாவுதீன் உடாவ்ஜி (கி.பி. 1340–41)
3. குத்புதீன் பெரோ ஷா (40 நாட்கள் மட்டும்)
4. சியாசுதீன் தமகனி (கி.பி. 1340–42)
5. நசிருதீன் (கி.பி. 1342 )
6. அடில்ஷா (கி.பி. 1356)
7. பக்ருதீன் முபாரக்ஷா (கி.பி. 1359–68)
8. அலாவுதீன் சிக்கந்தர் (கி.பி. 1368–78)

*முகமது பின் துக்ளக்கால் மதுரையின் ஆளுநராக (கொத்தவால்) நியமிக்கப்பட்டவன் ஜலாலுதீன் அசன்ஷா. அவனே 1334-35இல் கலகம் செய்து துக்ளக்கின் அதிகாரிகளைக் கொன்றுவிட்டு சுயாட்சியாளனாக அறிவித்துக் கொண்டான். இவனுக்குப் பின் பலரும் வரிசையாக ஆட்சிக்கு வந்தனர். தங்களுக்கென தனியாக நாணயங்களும் வெளியிட்டுக் கொண்டனர். மூர் இனத்தைச் சேர்ந்த இபன்பதூதா என்னும் வெளிநாட்டுப் பயணி கி.பி. 1342இல் மதுரையைச் சுற்றிப் பார்க்க வந்தான். அவனது குறிப்புகளில் மதுரை நகரின் பத்தாண்டு கால வரலாற்றுச் சூழலைப் பதிவு செய்துள்ளான். அதன்படி மதுரையின் முதல் சுல்தான் ஆன ஜலாலுதீன் அசன்ஷா ஐந்து ஆண்டு ஆட்சிக்குப் பின் படுகொலை செய்யப்பட்டான். அவனுக்குப் பின் வந்த அலாவுதீன் உடாவ்ஜீ ஓராண்டு ஆட்சியிலேயே கொல்லப்பட்டான். அடுத்து வந்த அவனது மருமகன் குத்புதீன் நாற்பது நாட்களிலேயே கொல்லப்பட்டான் என்பதை அறிகிறோம். நான்காவது சுல்தான் சியாசுதீன் தமகனியின் ஆட்சியின் போது தான் இபன்பதூதா மதுரைக்கு வந்துள்ளார்.*

*இத்தருணத்தில் போசள மன்னன் மூன்றாம் வல்லாளன் சுல்தானியர்கள் மீது படையெடுத்து வந்து கண்ணனூர்க் கொப்பம் (சமயபுரம்) கோட்டையை ஆறு மாதங்கள் முற்றுகையிட்டான். ஆனால் எதிர்பாராத தருணத்தில் கியாசுதீன் வஞ்சகமாக வல்லாளனைக் கைது*

செய்தான். அவனை மதுரைக்குக் கொண்டு வந்து கொன்று அவன் தோலை உரித்து அதில் வைக்கோலைத் திணித்து கோட்டை வாயிலில் தொங்கவிட்டான்.

இக்காலத்தில மதுரையில் கடுமையான தொற்று நோய் பரவியது. சுல்தானே பாதிக்கப்பட்டு இறந்தான். இபன்பதூதாவும் இந்நோயினால் தாக்கப்பட்டு மீண்டான். அதன் பிறகு சுல்தானியரின் ஆட்சி பற்றிய தெளிவான செய்திகள் கிடைக்கவில்லை. இறுதியாக ஆட்சி செய்த சுல்தான், அலாவுதீன் சிக்கந்தர் ஷா. இக்காலத்தில் விஜயநகர மன்னன் குமாரகம்பணன் தென்னகம் நோக்கிப் படை கொண்டு வந்து சம்புவராயர்களை வென்று திருச்சி, மதுரைப் பகுதிகளிலிருந்த சுல்தான்களையும் வெற்றி கண்டான். அவ்வகையில் கி.பி. 1371இல் மதுரையில் சுல்தான்களின் ஆட்சி முடிவுக்கு வந்தது. தோற்றுப் போன அலாவுதீன் சிக்கந்தர் ஷா திருப்பரங்குன்றம் மலைக்குகை ஒன்றில் ஒளிந்து கொண்டதாகவும் மக்கள் தொடர்ந்து சென்று அவனைப் பிடித்துக் கொன்றுவிட்டதாகவும் கூறப்படுகிறது. திருப்பரங்குன்றம் மலையிலேயே சிக்கந்தர் ஷாவின் உடல் அடக்கம் செய்யப்பட்டதாகவும் கூறப்படுகிறது.

சுமார் 50 ஆண்டுகாலம் நீடித்த சுல்தானியர் ஆட்சி மதுரை வரலாற்றின் கரை படிந்த காலம் எனலாம். கட்டாய மதமாற்றமும், பெண்கள் சிசுக்கள் படுகொலையும், அன்றாட நிகழ்ச்சியாக நடந்துள்ளன. பல இந்துக் கோயில்கள் சூறையாடப்பட்டன. திருவரங்கம் கோயிலிலிருந்து ரங்கநாதர் பாதுகாப்புக்காகத் திருப்பதிக்குக் கொண்டு செல்லப்பட்டார். மதுரை தலவரலாறு, ஸ்தல புத்தகம், ஸ்தானிகர் வரலாறு ஆகியவை மூலம் மதுரைமீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலின் நிலையையும் அறிய முடிகிறது.

டெல்லியிலிருந்து இஸ்லாமியர்கள் படை 60,000 குதிரைகளுடன் வந்து திருச்சி பகுதிகளில் பல சிவ, விஷ்ணு கோயில்களை அழித்துக் கொள்ளையிட்டதை மதுரை

யிலிருந்த பாண்டிய அரசன் அறிந்தான். வாளால் வழிதிறந்த பராக்கிரம பாண்டின் என்பவன் அச்சமயத்தில் மதுரையின் மன்னாக இருந்தான். அவன் மதுரையைவிட்டு வெளியேறி காளையார் கோயில் கோட்டையில் தங்கினான். அரசன் இல்லாத ஊரில் தாங்கள் எப்படி பாதுகாப்புடன் இருப்பது என்று கவலை கொண்ட கோயில் ஸ்தானிகர்கள் கோயிலைக் காக்க சில முன் எச்சரிக்கை நடவடிக்கைகளை மேற்கொண்டனர். சுவாமி கோயில் கருவறைக்கு முன்பாகக் கிளிக் கூண்டு ஒன்று அமைத்து மண்மேடு உண்டாக்கி, கருவறைக்கு முன்பாக ஒரு கற்சுவர் எழுப்பி அர்த்த மண்டபத்தில் புதிதாக ஒரு லிங்கத்தைத் தாபித்தனர். விமானத்தின் மேல் தளத்தில் மீனாட்சி அம்மன் திருஉருவைப் புதிதாக அமைத்தனர். செப்புத் திருமேனி களையெல்லாம் முசுகுந்தேஸ்வரர் கோயில் என்னும் சிற்றாலயத்துக்கு அருகில் மண்ணில் புதைத்து (பூப்பதனம்) வைத்தனர். மற்ற தங்கத் திருஉருவங்களை ஸ்தானிகர்கள் எடுத்துக் கொண்டு நாஞ்சில் நாட்டில் (இன்றைய கன்னியாகுமரிப் பகுதி) கிலுகிலுப்பைக் காட்டில் தஞ்சம் புகுந்தனர். சில காலம் பூசைகள் தடைபட்டன. கோயில் பேரழிவுக்குள்ளாகியது. ஆனாலும் குமாரகம்பணரின் வெற்றிக்குப் பிறகு மதுரை புதுப்பொலிவு பெற்றது. அடைக்கப்பட்ட கருவறை திறக்கப்பட்டது. அப்போது முன்பு ஏற்றி வைத்த விளக்கு தொடர்ந்து எரிந்ததையும் சூட்டப்பட்ட மலர் மாலை அன்றலர்ந்த மலர் போலக் காணப்பட்டதையும் கம்பணன் கண்டு அதிசயித்ததாகக் கூறப்படுகிறது.

மதுரை தல வரலாறு, மதுரை ஸ்தானிகர் வரலாறு, கங்க தேவியின் மதுரா விஜயம் ஆகிய நூல்களில் இந்நிகழ்ச்சிகள் எல்லாம் விரிவாகக் கூறப்படுகின்றன. விஜயநகர அரசர்களின் எழுச்சியும் வெற்றியுமே மதுரையை பேரழிவிலிருந்து மீட்டது என்பது மிகை ஆகாது.

# 9. விஜயநகரர் ஆட்சி

விஜயநகர அரசு கி.பி. 1336இல் தோன்றி தென்னகத்தில் நிலவி வந்த கொடுமையான இஸ்லாமிய ஆட்சிக்கு முடிவு கட்டியது. முதலாம் புக்கருடைய மகன் குமாரகம்பணனின் பங்களிப்பு இப்பணியில் அளப்பரியது. கி.பி. 1362இல் படையெடுத்து தமிழகத்தின் வடபகுதியில் இருந்த ராஜ கம்பீர ராஜ்யத்தின் தலைவர்களான சம்புவராயர்களை வென்றுத் தன்னை வலிமைப்படுத்திக் கொண்டு மதுரை வரை வந்து சுல்தானியர்களை வென்று தமிழகத்தையே மீட்டான் குமார கம்பணன். இது நிகழ்ந்த காலம் கி.பி. 1371 என்பர். இவ்வாண்டு முதல் 16ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி வரை மதுரையில் விஜயநகர அரசர்களின் ஆட்சி நீடித்தது.

தொடக்கத்தில் விசய நகர அரச குடும்பத்தவர்களே மதுரைப் பகுதியில் ஆளுநர்களாக நியமிக்கப்பட்டனர். எடுத்துக்காட்டாக முதலாம் புக்கரின் மகன் கம்பணன், இரண்டாம் ஹரிஹரரின் மகன் விருபாட்சன் ஆகியோர் தொடக்ககால ஆளுநர்கள் ஆயினர். இவர்கள் உடையார் என்ற பட்டத்தைச்சூட்டிக் கொண்டனர். சாளுவ, துளுவ குலத்து விசயநகர வேந்தர்கள் தங்கள் குடும்ப வாரிசுகளை ஆளுநர்களாக நியமிக்காமல் நல்ல அரசியல் அனுபவம் வாய்ந்த அதிகாரிகளையே தண்டநாயகர் என்ற பட்டத்துடன் ஆளுநர்களாக நியமித்தனர். அவ்வகையில் லக்கண்ண தண்டநாயகன் என்பவன் மிகவும் குறிப்பிடத்தக்கவன் ஆவான்.

குமார கம்பணன் இஸ்லாமியர்களின் கொடுங்கோன் மையை ஒழித்து நல்லாட்சி நடத்தி கோயில் வழிபாடுகளைச் சீர்திருத்தி நாட்டில் அமைதி தவழச் செய்தான். கி.பி. 1374இல்

அவன் மரணமடைந்த பின்னர் அவனது மகன் ஐம்மண்ண (எம்மண்ண) உடையாரும் மருமகன் பொற்காசு உடையாரும் இப்பகுதியின் ஆட்சியை ஏற்று கி.பி. 1402 வரை சிறப்புற நடத்தினர்.

இரண்டாம் தேவராயர் ஆட்சியின் போது (கி.பி. 1422 - 46) அவரது அமைச்சராக இருந்த லக்கண்ணன் மதுரை பகுதியின் ஆளுநராக நியமிக்கப்பட்டார். லக்கண்ணரும் அவரது சகோதரர் மாதண்ணரும் சேர்ந்து சுமார் 48 ஆண்டுகள் (14-05-1453) மதுரையைச் சிறப்பாக நிருவகித்தனர். இக்காலத்தில் லக்கண்ணர் இலங்கையின் மீது படையெடுத்து வெற்றி கண்டார். தட்சிண சமுத்திராதிபதி என்ற சிறப்புப் பட்டத்துடன் அவர் ஆட்சி செய்தார்.

லக்கண்ணர் காலத்தில் மதுரைப் பகுதியின் நிருவாகம் ஒழுங்குபடுத்தப்பட்டது. மதுரையின் நிருவாகத்தை வாணாதிராயர் என்னும் பாண்டியர்கீழ் பணிபுரிந்த அதிகாரிகள் வசம் ஒப்படைத்தார். வாணாதிராயர் பாண்டியனின் ஆசைநாயகியான காளையார்கோயில் ஆடல் மகள் அபிராமிக்குப் பிறந்தவன் என்று மதுரைத் தலவரலாறு கூறுகிறது. லக்கண்ணர் இவர்களைத் தேர்வு செய்து மதுரை, இராமநாதபுரம் பகுதிகளின் நிருவாகப் பொறுப்பை ஒப்படைத்துள்ளார். திருநெல்வேலிப் பகுதியை வலியிழந்த பாண்டியர்களைக் கொண்டு நிருவகித்துள்ளார்.

கி.பி. 15ஆம் நூற்றாண்டின் இறுதியில் நரசநாயக்கனின் தலைமையில் மீண்டும் விசயநகரர் படை வந்து மதுரைப் பகுதியில் தம் ஆதிக்கத்தை நிலை நாட்டியது. அப்போது மதுரையின் அரசனாக இருந்த மானபூசன் என்பவனை வென்றதாகக் கூறப்படுகிறது. இவன் ஒரு வாணர் தலைவனாகவே இருக்கலாம். மானபூசன் என்பது பாண்டியர்களைப் பொதுவாகக் குறிக்கும் பட்டப் பெயர். எனவே, பாண்டிய நாட்டின் ஆளுநராக் இருந்த வாணாதிராயனும் இப்பெயரைச் சூடிக் கொண்டிருக்கலாம். லக்கண்ண தண்ட நாயகர் காலத்தில் காளையார் கோயில்

பகுதியிலிருந்து வரவழைக்கப்பட்ட வாணாதிராயர் குடும்பத்தைச் சேர்ந்த சிலர் தொடர்ந்து மதுரையில் ஆளுநர்களாக நீடித்துள்ளனர்.

கி.பி. 16ஆம் நூற்றாண்டின் முற்பகுதிவரையில் நாயக்கர் தலைவர்களும் இப்பகுதிகளில் ஆளுநர்களாகச் செயல்பட்டுள்ளனர். மதுரைத் தலவரலாறு பத்துக்கும் மேற்பட்ட நாயக்கர்களைப் பட்டியலிடுகிறது. விசயநகர வேந்தர் கிரு ண தேவராயரின் மறைவுக்குப் பின் அவரது சகோதரர் அச்சுதராயர் காலத்தில் மதுரைப் பகுதியில் பெருங்குழப்பம் நிலவியது. சாளுவ வீரநரசிம்மன் என்னும் செல்லப்பன் ஒரு வலிமைமிக்க வீரனாய் தென்பகுதியில் திகழ்ந்தான். இவனும் பரமக்குடி தும்பிச்சி நாயக்கனும், திருவடி ராஜ்யத்தின் (கேரள) மார்த்தாண்டவர்மனும் கூட்டுச் சேர்ந்து கலவரத்தில் ஈடுபட்டுத் தென்காசி, நெல்லைப் பகுதிகளில் அமைதியைக் குலைத்தனர். அச்சுதராயர் தனது மைத்துனன் சளக்கராஜு திருமலை என்பவன் தலைமையில் படை அனுப்பி கலகத்தை அடக்கி அதற்குக் காரணமானவர்களைக் கைது செய்தார்.

சதாசிவராயரின் ஆட்சியில் அவரது ஆளுநர்களால் மதுரை கூடலழகர் பெருமாள் கோயில் முற்றிலும் திருத்திக் கட்டப்பட்டது. இக்கோயில் முற்பாண்டியர் காலத்தது என்பதற்கு இங்குள்ள இராமர், லட்சுமணர், சீதை ஆகியோரின் கி.பி. 10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த செப்புத் திருமேனிகளே சான்றுகளாகும். ஆனால் பழமையான கல்வெட்டுகள் எதுவும் இக்கோயிலின் தொன்மையை உறுதிப்படுத்துவனவாக இல்லை. தற்போதுள்ள விமான அதிட்டானத்தில் உள்ள கல்வெட்டுகள் கி.பி. 16 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை.

சதாசிவராயரின் படைத் தலைவன் விட்டலதேவ ராயன், இவன் கீழ் ஒரு அதிகாரியாகப் பணிபுரிந்தவன் திம்மப்ப நாயக்கன். இவன் கி.பி. 1551இல் செய்த திருப்பணியே கூடலழகர் கோயில் கல்வெட்டில்

கூறப்படுகிறது. சந்தோப சௌந்தரரான கூடலழகப் பெருமாளுக்கு நித்தியபடி நைவேத்தியத்துக்கும் தசமித் திருநாள் கட்டளைக்குமாக மதுரை மண்டலத்திலுள்ள பல ஊர்கள் கொடையாக வழங்கப்பட்டன. பெருங்குடி, இரட்டைக்குளம், வண்ணானேந்தல், குமுழங்குளம், அவனி நாராயணபுரத்து உட்கிடையான சிந்தாமணி, மட்டப்பாறை சீர்மையிலுள்ள முள்ளிப்பள்ளம் கிராமம், திருப்புவனம் சீர்மையிலுள்ள புல்வாய்க்கரை, அல்லிக்குளம், செங்குளம், குண்டுகுளம், பசுமண்குளம் முதலிய கிராமங்களும் தானமாகத் திம்மப்ப நாயக்கரால் அளிக்கப்பட்டன. இவ்வூர்களில் பல இன்றும் அதே பெயர்களில் வழங்கி வருகின்றன.

விசய நகர அரசர்களின் காலத்திலேயே அவர்களது படைப் பிரிவில் பணியாற்றிய நாகமநாயக்கராலும் அவரது மகன் விசுவநாத நாயக்கராலும் மதுரை நாயக்கர் அரச மரபு ஒன்று உருவாக்கப்பட்டது. முதலில் விசயநகர அரசர்க்கு கட்டுப்பட்டு ஆட்சி செய்த இவர்கள் நாளடைவில் சுயாட்சி பெற்றவர்களாக அறிவித்துக் கொண்டனர். இந்நாயக்கர் ஆட்சி விரிவாக அறியப்பட வேண்டியதாகும்.

# 10. வாணாதிராயர்கள்

தமிழக வரலாற்றில் சங்க காலந்தொட்டே வாணர்கள் பேசப்படுகிறார்கள். மகாபலிச் சக்கரவர்த்தியின் வழிவந்தவர்கள் எனத் தங்களைக் கூறிக் கொள்ளும் இவர்கள் தீவிரமான வைணவ பக்தர்கள் ஆவர். தங்களை மாவலி வாணாதிராயர் என்று அழைத்துக் கொள்கின்றனர். அகநானூறு 325ஆம் பாடலில் பாணர் நாட்டுக்குச் செல்லும் வழியை மாமூலனார் குறிப்பிடுகிறார். அகம் 113 ஆம் பாடலில் பாணர் நாட்டில் நடைபெற்ற விழா விவரிக்கப்படுகிறது. அகம் 117, 204, நற்றிணை 340 ஆகிய பாடல்களில் பாணன் சிறுகுடியின் வளம் கூறப்படுகிறது.

வரலாற்றுத் தொடக்க காலம் முதல் வாணர்கள் குறுநிலத் தலைவர்களாக அடையாளங் காணப் பட்டுள்ளனர். கி.பி. 4ஆம் நூற்றாண்டு முதல் இவர்கள் சாதவாகனர்கள் கீழ் அடங்கிய குறுநிலத் தலைவர்களாக அரசியலில் அறிமுகம் ஆகியுள்ளனர். பின்னர் தென்னகத்தின் கதம்பர், சாளுக்கியர், ராட்டிரகூடர், பல்லவர், சோழர், பாண்டியர், விசயநகரர் என அனைத்து அரசமரபினருடனும் நம்பிக்கையான அதிகாரிகளாகவும் படைத் தலைவர் களாகவும் ஆளுநர்களாகவும் செயல்பட்டு வந்துள்ளனர். எந்த ஒரு பேரரசுக்கும் கூட இல்லாத வகையில் நீண்ட நெடிய தொடர்ச்சியான வரலாற்றுக் குரியவர்களாகத் திகழ்கின்றனர் வாணாதிராயர்கள்.

வாணர்கள் பெரும்பான்மையாக வாழ்ந்த பகுதி பெரும்பாணப்பாடி (அ) வாணகோப்பாடி என அழைக்கப்

பட்டது. இது இன்றைய வட ஆர்க்காடு பகுதியில் அமைந்திருந்தது. பல்லவர்கள், சோழர்கள் ஆட்சிக் காலங்களில் வாணர்கள் தமிழகத்தின் தென் பகுதிக்குப் பரவலாயினர். சேலத்திற்கு அருகிலுள்ள ஆறகளூரைத் தலைநகராகக் கொண்டு வாணர்களின் ஒரு பிரிவினர் செயல்பட்டனர். அப்பகுதி மகதை மண்டலம் எனப்பட்டது. இது தென்னார்க்காடு, சேலம், திருச்சி மாவட்டங்களின் சில பகுதிகளை உள்ளடக்கியதாகும்.

சோழர்கள் வலிகுன்றியவுடன் அவர்களின் கீழிருந்த வாணாதிராயர்கள் பாண்டியர்கள்பால் விசுவாசம் காட்டினர். மதுரை, திருச்சி பகுதிகளில் பல பொறுப்புகளில் பாண்டியர்க்கு அடங்கிச் செயல்பட்டனர். ஆனால் பாண்டிய நாட்டுப் பகுதிகளில் கிடைக்கும் கல்வெட்டுகள் சில கி.பி. 11ஆம் நூற்றாண்டு முதலே வாணாதிராயர்கள் இப்பகுதிகளில் பரவியிருந்தமையை வெளிப்படுத்துகின்றன. அழகர்கோயிலில் காணப்படும் கி.பி. 11ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டு ஒன்றில் பாணாதிராஜன் என்ற பெயர் குறிப்பு மட்டும் கிடைத்துள்ளது. கி.பி. 12ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தென்கரைக் கல்வெட்டு ஒன்றில் வாணாதிராசன் என்னும் அரசியல் அதிகாரி ஒருவன் கையொப்பமிட்டுள்ளான். இக்காலத்தில் சோழர்களிடத்திலும் பாண்டியர்களிடத்திலும் மாறி மாறி பணியாற்றிய பல வாணாதிராயர்களைக் காணலாம்.

குடுமியான்மலையிலுள்ள பாடல் கல்வெட்டு ஒன்று வாணாதிராயன் ஒருவன் பாண்டியர்களை வெற்றிகண்டு நாட்டுக்குத் தெற்கே துரத்தினான் எனக் கூறுகிறது. ஆனால் அடுத்த சில ஆண்டுகளில் பாண்டியன் சோழ நாட்டை வென்று அப்பகுதியைப் பாணர்க்குக் கொடுத்தான் என்று மற்றொரு பாடல் கல்வெட்டு கூறுகிறது.

செம்பியனைச் சினமிரியப் பொருது சுரம்புக ஓட்டி
பைம் பொன் முடிபறித்து பாணனுக்குக் கொடுத்தருளி

என்று வரும் மாறவர்மன் சுந்தரபாண்டியன் மெய்க்கீர்த்தி இதனை உறுதிப்படுத்தும். முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் காலத்தில் சுந்தர பாண்டிய வாணாதிராயன் எனும் ஒருவன் ஒரு அதிகாரியாகச் செயல்பட்டுள்ளான். மாறவர்மன் இரண்டாம் சுந்தரபாண்டியனின் கல்வெட்டு ஒன்று 'சீவல்லவன் மதுரைப் பெருமாள் ஆன வாணகோவரையன்' என்று ஒருவனைக் குறிப்பிடுகிறது. விக்கிரமபாண்டியன் கல்வெட்டு ஒன்றில் மகாபலி வாணாதிராயன் ஒருவன் அரசனின் முதலி எனச் சுட்டப்படுகிறான். முதலாம் மாறவர்மன் குலசேகரன் காலத்தில் பிள்ளை மகாபலி வாணாதிராயர் கோநாட்டின் ஆளுநராகக் குறிப்பிடப்படுகிறான்.

சில பாண்டிய அரசர்கள் தங்களது வாணர் தலைவர் களைப் பிள்ளை, நம் மக்கள் என்று குறிப்பிடுகின்றனர். இது வெறும் பாசவார்த்தை அல்ல. ஏதோ ஒருவகை உறவு இருக்கலாம் என்றே தோன்றுகிறது. பல வாணர் தலைவர்கள் பாண்டிய அரசர்களின் பெயரையே கொண்டுள்ளனர். எடுத்துக்காட்டாக சுந்தர பாண்டிய வாணாதிராயன், பராக்கிரம பாண்டிய மகாபலி வாணாதிராயன் ஆகிய பெயர்களைச் சுட்டலாம். இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் இரண்டு கல்வெட்டுகள் தச்சனூர் அருளாளன் சேவகத்தேவன் என்ற வாணாதிராயனைப் பாண்டியனின் அம்மான் என்று குறிப்பிடுகின்றன. இவன் மதுரைக் கோயிலில் பல திருப்பணிகளைச் செய்துள்ளான். இவன் மதுரை சுந்தரேஸ்வரர் கோயிலில் சந்தி ஒன்று ஏற்படுத்தி அதற்காக ஒரு கிராமத்தைக் கொடை அளித் துள்ளான். தன் பெயரால் ஏற்படுத்தின வாணாதிராயன் வாசலில் இறைவன் வரும்போது பரதேசி, கோவணவரைக் கொண்டு சடாரிப் பண்ணில் திருவெம்பாவை பாட ஏற்பாடு செய்துள்ளான்.

விஜய நகர ஆட்சிக் காலத்திலும் வாணாதிராயர்கள் மதுரைப் பகுதியில் செல்வாக்கு மிக்க அதிகாரிகளாகத்

திகழ்ந்தனர். லக்கண்ண தண்ட நாயகர் காளையார் கோயில் பகுதியிலிருந்து சில வாணாதிராயர்களை மதுரையில் பணி அமர்த்தியதை முன்னரே கண்டோம். திருமாலிருஞ் சோலை நின்றான் ஆன மாவலி வாணாதிராயன் ஒருவன் விசயநகரர் காலத்தில் (சகம் 1350) தன்னை மதுராபுரி மகாநாயகன் என்று கூறிக் கொள்ளுகிறான். உறங்காவில்லி தாசன் மாவலி வாணாதிராயன் என்பவர் கி.பி. 1453இல் மதுரையின் ஆட்சியை நடத்தியுள்ளான். திருமாலிருஞ் சோலை நின்றான். உறங்காவில்லிதாசன் ஆன மாவலி வாணாதிராயன் என்றும் அவன் கல்வெட்டுகளில் குறிக்கப்படுகிறான். விசயநகர வேந்தர்கள் வலிமை குன்றிய போது வாணாதிராயர்கள் தங்கள் தனி ஆணையையும் வழங்கி உள்ளார்கள். புவனேகவீரன், சமர கோலாகலன் என்ற பட்டப் பெயர்களையும் இவர்கள் கொண்டுள்ளனர். இவர்கள் தீவிர வைணவ பக்தர்கள். கருடக் கொடியைக் கொண்டவர்கள். தாங்கள் வெளியிட்ட காசுகளில் ஒருபுறம் புவனேகவீரன் (அ) சமரகோலாகலன் என்ற பெயரும் மறுபுறம் மண்டியிட்ட கருடன் உருவமும் பொறித்துள்ளனர். கருட கேதனன், வேதியர் காவலன், வீரகஞ்சுகன், பூபாலகோபாலன் என்று மேலும் சில சிறப்புப் பெயர்களும் இவர்கள் பெற்றுள்ளனர்.

அழகர்கோயில் பகுதியே இவர்களின் அரசியல் தலைநகரமாக விளங்கியது. இக்கோயிலைச் சுற்றி வலிமையான கோட்டையைக் கட்டியவர்கள் இவர்களே. அழகர்கோயிலிலும், திருவல்லிபுத்தூர் கோவிலிலும் பல திருப்பணிகளைச் செய்துள்ளனர். தங்கள் கல்வெட்டுகளின் தொடக்கத்தில் அழகர் திருஉள்ளம் என்று குறிப்பிடுவது இவர்கள் வழக்கம். மதுரை நாயக்கர் காலத் தொடக்கம் வரை இவர்கள் செல்வாக்குடன் திகழ்ந்தனர். திருமாலிருஞ் சோலை நின்றான். சுந்தரத் தோளுடையான் மாவலி வாணாதிராயன், இறந்த காலமெடுத்த மாவலி வாணாதிராயர் என அடுத்தடுத்து பல தலைவர்கள் இப்பகுதியை நிருவகித்தனர்.

*மாவலி வாணாதிராயர்கள் தீவிரமான வைணவ பக்தர்களாக இருப்பினும் சிவன் கோயில்களுக்கும் நல்ல ஆதரவு காட்டியுள்ளனர். இவர்களால் திருவில்லிபுத்தூர், காளையார் கோயில், அழகர்கோயில், மீனாட்சி அம்மன் ஆலயம் ஆகிய பல கோயில்கள் திருப்பணி கண்டுள்ளன. அழகர்கோயிலின் இறைவனுக்குப் பச்சை கற்பூரம், குங்குமப்பூ, சந்தனம் முதலியவற்றை அரைத்து சாத்துவதற்கு அழகிய அம்மி ஒன்றை உறங்காவில்லி தாசன் வாணாதிராயன் கொடுத்துள்ளான். அதில்*

திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலி வாணாதிராயன்
உறங்கா வில்லிதாசன் ஆன சமரகோலாகலன்

*என்ற கல்வெட்டும் பொறிக்கப்பட்டுள்ளது. இன்று சோமசந்த விமானம் என்று பெயர் பெற்றுள்ள அழகர் கோயில் விமானம் உறங்காவில்லி தாசனால் கி.பி. 1464இல் கட்டுவிக்கப்பட்டது. இத்திருப்பணியைச் செய்ய திருவளவன் சோமயாஜி என்பவனுக்கு குலமங்கலம் என்ற ஊர், வரி நீங்கிய தானமாக அளிக்கப்பட்டது.*

*மதுரை மீனாட்சியம்மன் ஆலயத்தில் வாணாதிராயர்களால் பல திருப்பணிகள் செய்யப்பட்டன என்பதை மதுரை திருவாலவாயுடையார் கோவில் திருப்பணி மாலை தெரிவிக்கிறது. குலசேகர பாண்டியனால் கட்டப்பட்டுச் சிதைந்து போன மண்டபம் ஒன்றைச் சீரமைத்துள்ளனர் வாணாதிராயர்கள். சொக்கநாதர் சன்னதி மகா மண்டபத்தின் முன்புறமுள்ள ஆறுகால் பீடம் வாணாதிராயர்களால் கட்டப்பட்டுள்ளது. அங்கயற்கண்ணி சன்னதியில் உள்ள முதலாம் திருச்சுற்று மண்டபத்தையும் சன்னதிக்கு முன்புறமுள்ள மகாமண்டபத்தையும் அதிலுள்ள பள்ளியறையையும், கட்டியவன் திருமாலிருஞ்சோலை மாவலி வாணாதிராயனே என்று திருப்பணி மாலை கூறுகிறது. தல்லாகுளம் பிரசன்ன வெங்கடேசப் பெருமாள் கோயிலில் சில திருப்பணிகள் மாவலிவாணாதிராயர்களால் செய்யப்பட்டுள்ளன. இன்று இக்கோயிலில் உள்ள*

திருமால், ஸ்ரீதேவி பூதேவி ஆகிய உற்சவத் திருமேனிகள் வாணாதிராயர்களின் கொடையாகும் மதுரை கூடலழகர் பெருமாள் கோயில் திருமோகூர் காளமேகப் பெருமாள் கோயில் மதுரையிலிருந்த ஏழுகடல் தெப்பகுளம் ஆகியவை வாணாதிராயர்களின் கலைப்படைப்பாகும். அழகர்கோயில் வில்லிபுத்தூர் ஆண்டாள் கோயில், திருமோகூர் காளமேகப் பெருமாள் கோயில், கூடலழகர் கோயில் ஆகியவற்றில் வாணாதிராயர் காலச் செப்புத் திருமேனிகள் பல உள்ளன இவ்வகையில் ஒரு சிற்றரசு மரபினராக இருந்த போதிலும் மதுரைப் பகுதி வரலாற்றில் வாணாதிராயர்கள் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளனர் எனலாம்

# 11. மதுரை நாயக்கர்கள் ஆட்சி

விஜயநகரர் ஆட்சியில் கி.பி. 16ஆம் நூறறாண்டின மத்தியில் நாயக்கத்தன முறை செயல்படுத்தப்பட்டது. அதன்படி அரசன் பூமிக்கு முழு உரிமை உடையவன். அவன் தன் கீழ் சிலருக்கு சில பகுதிகளைப் பிரித்துக் கொடுதது ஆளவைத்தான். நாயக்கர் எனப்பட்ட இவர்கள் ஓரளவு சுதந்திரமாக ஆள்வதுடன் ஆண்டிற்கு குறிப்பிட்ட ஒரு தொகையை அரசனுககுக் கப்பமாகச் செலுத்த வேண்டும். தங்களுக்கென ஒரு படையை வைத்துக்கொண்டு தேவை ஏற்பட்ட காலங்களில் அரசுக்கு உதவ வேண்டும். இந்த ஏற்பாட்டின்படி மதுரை தஞ்சை செஞ்சி ஆகிய பகுதிகளில் மூன்று நாயக்க அரசுகள் செயல்பட்டன மத்திய அரசு வலிமை குன்றியபோது இவர்கள் தங்களைத் தனி அரசாக அறிவித்துக்கொண்டு சுதந்திரமாகச் செயல்படலாயினர்.

மதுரையில் கிரு ணதேவராயரின இறுதிக்காலத்தில் (1529-1530) விசுவநாத நாயக்கரால் நாயக்க அரசு உருவாக்கப்பட்டது தமிழகத்தின் தென்பகுதியில் வீரசேகர சோழனுக்கும் சந்திர சேகரபாண்டியனுக்கும் இடையே போர் ஏற்பட்டு நாடு அமைதியிழந்திருந்தது பாண்டியன் விசயநகர் உதவியை நாடினான் கிரு ண தேவராயர் தனது படைத்தலைவரான கொட்டியம் நாகம நாயக்கரைப் பாண்டியனுக்கு உதவுமாறு அனுப்பினார். நாகமநாயக் கரும் பாண்டியனைச் சார்ந்து போரிட்டுச் சோழனை அடக்கியபின் பாண்டியனை அரியணையில் அமர்த்தாமல் தானே மதுரைக்கு மன்னன் என அறிவித்துக்கொண்டார். சினமுற்ற கிரு ணதேவராயர் நாகமரைக் கைது செய்ய

*அவரது மகன் விசுவநாதனையே படையுடன் அனுப்பினார். விசுவநாதரும் அரசக் கட்டளையை ஏற்று ராஜவிசுவாசத்துடன் தனது தந்தை நாகமரைக் கைது செய்து அரசவையில் நிறுத்தினார். கிரு ணதேவராயர் விசுவநாதரைப் பாராட்டி அவருக்கே மதுரை நாயக்க அரசை ஆளும் உரிமையை அளித்தார். அன்று தொடங்கி (கி.பி. 1530) மதுரை நாயக்க அரசு உருவாகித் தொடர்ந்து 13 அரசர்கள் கி.பி. 1530 முதல் 1736 வரை மதுரையை ஆண்டனர். இன்றைய மதுரையின் பல கலைச் சின்னங்களுக்கும் காரணமானவர்களாக இந்நாயக்கர் மரபு அரசர்கள் திகழ்கின்றனர்.*

**1. விசுவநாத நாயக்கர் (கி.பி. 1529-1564)**

*கிரு ணதேவராயரின் இறுதிக்காலத்தில் விசுவநாதர் மதுரை நாயக்க அரசின் முதல் ஆட்சியாளராகப் பதவி ஏற்றார். அவருக்கு எல்லா வகையிலும் உதவியாகத் தளவாய் அரியநாதர் என்பவர் பணியாற்றினார். அமைச்சுப் பதவியும், படைத்தலைமைப்பதவியும் இணைந்ததுதான் தளவாய் பதவி. ஆற்றல்மிக்க அரியநாதர் இப்பதவியில் அமர்ந்து முதல் மூன்று நாயக்க மன்னர்களிடத்தில் பணியாற்றியது நாயக்க அரசு வலிவும் பொலிவும் பெறப் பெருங்காரணமாய் அமைந்தது.*

*விசுவாதர் தஞ்சை நாயக்க அரசன் செவ்வப்பனுடன் சுமுக உறவுகொண்டு வல்லம் கோட்டையை அவருக்குக் கொடுத்துத் திருச்சியைத் தனக்குப் பெற்றுக் கொண்டார். திருச்சிக் கோட்டையை வலுப்படுத்தி, காவிரிக்கரையில் காடுகளை அழித்து கள்ளர் தொல்லையை முறியடித்து, தாயுமானவர் கோயிலைப் புதுப்பித்துத் திருச்சிராப் பள்ளியைச் சீர்திருத்தினார்.*

*தென்பாண்டி நாட்டில் கயத்தாறு பகுதியில் நிலவிய பஞ்சபாண்டியர் கலகத்தை அடக்கி, நெல்லையப்பர் கோயிலில் திருப்பணிகள் செய்து, தாமிரபரணிக்*

*கரைகளில் காடுகளை அழித்துக் கள்ளர் தொல்லையை ஒடுக்கிக் கட்டுக்குள் கொண்டுவந்தார். கம்பத்தில் குழப்பம் விளைவித்தவர்களை வெல்ல இராமபத்திர நாயக்கரை அனுப்பி வெற்றி கண்டார். இவர் காலத்தில் மதுரை, திருச்சி, இராமநாதபுரம், திருநெல்வேலி, சேலம், கோயம்புத்தூர் மாவட்டங்களும் திருவாங்கூரின் ஒரு பகுதியும் நாயக்கர் ஆட்சியின் கீழ் இருந்தது. இப்பரந்துபட்ட நாட்டை எளிதில் நிர்வாகம் செய்வதற்காக 72 பாளை யங்களாகப் பிரித்து அதன் தலைவர்களாக 72 பாளையக் காரர்களை நியமித்தார். இவர்கள் மதுரைக் கோட்டை மதிலில் இருந்த ஒவ்வொரு கொத்தளத்திற்கும் காவல் பொறுப்பினர் ஆவர்.*

*ஏற்கனவே விசயநகரர்களால் நடைமுறைப்படுத்தப் பட்ட அமரநாயக முறையையும் காகதீய அரசன் இரண்டாம் பிரதாப் ருத்ரன் நடைமுறைப்படுத்திய நாட்டுப்பிரிவு முறைகளையும் முன்னுதாரணமாகக் கொண்டு விசுவநாதர். அரியநாதரின் உதவியுடன் பாளையப்பட்டு களை உருவாக்கினார். இதன் மூலம் படை உதவியும் திரைப் பணமும் நாட்டு நிருவாகமும் முறைப்படுத்தப்பட்டன.*

*விசுவநாதன் ஆட்சியில் மதுரைப் பகுதியில் அமைதி நிலவியது. தமிழர், கன்னடர், தெலுங்கர் என முப்பிரிவினரும் ஒற்றுமையோடு வாழ்ந்தனர். பாழ்பட்டுக் கிடந்த மதுரை மீனாட்சி அம்மன் ஆலயம் விசுவநாதரால் பொலிவு பெற்றது. இன்றும் புதுப் பொலிவோடு விளங்கும் மதுரைக் கோயில் ஆயிரங்கால் மண்டபத்தைத் தளவாய் அரியநாதர், விசுவநாதன் காலத்திலேயே கட்டினார் என்பர். தளவாய் அரியநாதர் குதிரையில் அமர்ந்தபடி உள்ள சிலையும் விசுவநாதரின் திருஉருவும் ஆயிரங்கால் மண்டபத்தில் வடிக்கப்பட்டுள்ளன.*

## 2. முதலாம் கிரு ணப்ப நாயக்கர் (கி.பி. 1564 - 1572)

விசுவநாத நாயக்கரின் மகன் முதலாம் கிரு ணப்ப நாயக்கர் தந்தைக்குப் பின் ஒன்பது ஆண்டுகள் மதுரையில் நல்லாட்சி நடத்தினார். தந்தையிடம் கற்ற அனுபவத்துடன் இயல்பான வீரமும் துணைவர ஆட்சியின் தொடக்கத்தில் எழுந்த தும்பிச்சி நாய்க்கனின் கலகத்தை அடக்கி பரமக்குடிப் பகுதியில் அமைதியை நிலை நாட்டினார். பெரும்படையுடன் இலங்கைக்குப் போர் மேற்சென்று கண்டி மன்னனின் செருக்கை அடக்கினார். தலைக் கோட்டைப் போரில் ராஜவிசுவாசத்துடன் நடந்து கொண்டு தளவாய் அரியநாதரை திருமலைராயரின் கரத்தை வலுப்படுத்த அனுப்பி வைத்தார்.

இவர் காலத்திலும் அரியநாதர் தளவாயாகப் பணிபுரிந்தார். இவர் காஞ்சிபுரத்திற்கு அருகில் மெய்ப்பேடு என்னும் கிராமத்தில் வாழ்ந்து வந்த தம் உறவினர்களைக் கொண்டு வந்து மதுரைக்கு அருகில் சோழவந்தானில் குடி அமர்த்தினார். தொண்டை மண்டல வேளாளர்களின் குடிபெயர்வுக்கு இதுவே தொடக்கமாக அமைந்தது. பாளையங்கோட்டைக்கு அருகில் கிரு ணாபுரம் என்னும் நகரத்தை அமைத்து அதில் அற்புதமான சிற்பங்களுடன் கூடிய கோயிலை உருவாக்கினார்.

மதுரை மீனாட்சி கோயிலில் வெள்ளியம்பலமும் வடக்குக் கோபுரமும், மடைப்பள்ளியும், மூர்த்தி அம்மன் மண்டபமும் இரண்டாம் திருச்சுற்று மண்டபமும் கட்டினார். மீனாட்சி அம்மனுக்குப் பொற்கவசம் பூட்டினார். தூண்களில் பொன் தகடு போர்த்தினார் என்று இவர் செய்த அரும்பணிகளை மதுரை திருப்பணி மாலை பட்டியலிடுகிறது.

## 3. வீரப்ப நாயக்கர் (கி.பி. 1572-1595)

கிரு ணப்ப நாயக்கரின் மூத்த மகன் வீரப்ப நாயக்கர் 23 ஆண்டு காலம் ஆட்சி செய்தவர். தன் தம்பி விசுவநாதன்

துணையுடனும் தளவாய் அரியநாதரின் ஆலோசனையுடனும் நல்லாட்சி தந்தார். இவர் காலத்தில் அழகர் கோயில் பகுதியில் இருந்த வாணாதிராயர்கள் கலகத்தில் ஈடுபட்டனர். அவர்களை ஒடுக்கி அமைதி ஏற்படுத்தினார். தென்பாண்டி அரசர்களான அதிவீரராம பாண்டியன், வரதுங்கபாண்டியன் ஆகியோரை அடக்கித் தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொண்டார். திருச்சிக் கோட்டையை வலிமைப்படுத்தினார். அருப்புக்கோட்டையில் புதிய கோட்டை கட்டினர். தில்லைக் கோயிலில் திருமதிலை வலிமையுடையதாக்கினார். மதுரைக் கோயிலிலும் பல அரும்பணிகள் செய்தார். சொக்கநாதர் சன்னதி முன்பாக உள்ள கம்பத்தடி மண்டபம் கி.பி. 1583இல் இவர் காலத்தில் உருவானது என்பதை இங்குள்ள தூண் ஒன்றில் வெட்டப்பட்டுள்ள தெலுங்கு, தமிழ் கல்வெட்டால் அறியலாம். கோரிப்பாளையம் தர்காவுக்கு முன்பு கூன் பாண்டியனால் விடப்பட்ட நிலத்தை ஆவணத்தைப் பார்த்து உறுதி செய்து மீண்டும் வழங்கியதாகக் கோரிப்பாளையம் தர்கா கல்வெட்டு கூறுகிறது. இவர் காலத்தில் கிறித்தவ மதத்தைப் பரப்ப 1592இல் ஏசு கழகத் தொண்டர்கள் பெர்ணாண்டஸ் என்ற போர்ச்சுகீசியர் தலைமையில் முயற்சிகள் மேற்கொண்டனர். கிறித்தவ மதத்தினர்க்கு மன்னர் சமயப் பொறையோடு ஆதரவளித்த போதிலும் மக்கள் ஆதரவு இன்மையால் அம்முயற்சி வெற்றி பெறவில்லை.

## 4. இரண்டாம் கிருஷ்ணப்ப நாயக்கர் (கி.பி. 1595 - 1601)

சுமார் ஆறு ஆண்டுகளே அமைதியான ஆட்சியைத் தந்த இவர் வீரப்ப நாயக்கரின் புதல்வர் ஆவார். இவர் காலம் வரை தளவாயாக அரும்பணியாற்றிய தளவாய் அரியநாதர் முதுமை காரணமாக கி.பி. 1600இல் இறந்தார். இவரது பரந்த நாட்டுப் பரப்பில் எவ்வித இடையூறும் செய்யாது பாண்டிய சிற்றரசர்களும், திருவாங்கூர் மன்னர்களும் கட்டுப்பட்டிருந்தனர். அமைதியான

ஆட்சிகண்ட கிருஷ்ணப்பர் மிக விரைவில் இயற்கை எய்தினார்.

## 5. முத்து கிருஷ்ணப்ப நாயக்கர் (கி.பி. 1601-1609)

இரண்டாம் கிருஷ்ணப்பரின் இளவல் விசுவப்ப நாயக்கரின் மகனே இந்த முத்து கிருஷ்ணப்பர். இவர் தந்தை இளமையிலேயே காலமானார். முத்து கிருஷ்ணப்பருக்கு முன் அவரது சிற்றப்பன் கஸ்தூரி ரங்கப்பர் ஆட்சியைக் கவர்ந்தார். ஆனால் மக்கள் ஆதரவின்மையால் ஒருவார காலம் கூட அவரால் ஆட்சி செய்ய முடியவில்லை. எனவே முறைப்படி அரசுரிமை பெற்ற முத்து கிருஷ்ணப்பர் அமைதியான ஆட்சியைக் கொடுத்தார். இவர்காலத்தில் இராமநாதபுரம் சீமையில் எழுந்த கலகத்தை அடக்க போகலூரில் இருந்த சடையத்தேவன் உடையான் என்பவனுக்குச் சேதுபதி எனும் பட்டம் கொடுத்து அரசனாக்கினார். இராமேஸ்வரம் செல்லும் அணைக்கும், சாலைக்கும் காவலனாக (சேதுபதி - அணை காவலன்) நியமித்து பக்தர்களின் நலன் காக்கச் செய்தார். இவர் காலத்தில் ராபர்ட்-டி-நொபிலி என்னும் ரோமானியக் கிறித்தவர் தமது சமயப் பணியில் வெற்றி கண்டார். இந்துத் துறவி போல துவராடை அணிந்து கொண்டு, ஊன் உணவு துறந்து, இந்துமதச் சடங்குகளை தன் மதத்திலும் ஏற்று மக்களைக் கவர்ந்து கிறித்தவ மதத்தைப் பரப்பினார். முத்து கிருஷ்ணப்பர் அதற்கும் ஆதரவாக இருந்தார்.

## 6. முதலாம் முத்து வீரப்ப நாயக்கர் (கி.பி. 1609 - 1623)

இவர் முத்து கிருஷ்ணப்பரின் மூத்த புதல்வர். தந்தையின் மறைவுக்குப் பின் மதுரையின் அரசுப் பொறுப்பை ஏற்றார். இவரது இளவலே புகழ்மிகு திருமலை நாயக்கராவார். முத்து வீரப்பர் என்ற பெயரில் மூவர் மதுரையை ஆண்டதால் இவர் முதலாம் முத்து வீரப்பர் எனப்படுகிறார். இவர் தலைமை ஏற்றதும் விசய நகர அரசர்க்குக் கப்பம் கட்ட மறுத்து முழு உரிமை பெற்ற

மன்னராக முயன்றார். ஆனால் இவரது முயற்சி வெற்றி அளிக்கவில்லை. இவர் செய்த மற்றொரு குறிப்பிடத்தக்க செயல் தலைநகரைத் திருச்சியாக மாற்றியது ஆகும். அடிக்கடி மோதலுக்குரியவராக இருக்கும் தஞ்சை நாயக்கரை முறியடிக்கவே அவர் திருச்சிக்குத் தலைநகரை மாற்றியதாகக் கூறுவர். இவர் காலத்தில் பாண்டிய சிற்றரசர்களும் கட்டுக்குள் இருந்தனர். மைசூர் படைகள் திண்டுக்கல்லை முற்றுகையிட்ட காலத்தில் கன்னிவாடி, விருபாட்சி பாளையக்காரர்கள் உதவியுடன் அதனை முறியடித்தார். பெர்ணாண்டஸ் பாதிரியாருக்கும், ராபர்ட்-டி-நொபிலி பாதிரியார்க்கும் இடையில் ஏற்பட்ட கருத்து வேறுபாடுகளால் கிறித்தவ மதம் பரவுவதில் பின்னடைவு ஏற்பட்டது. சமயப் பொறைமையும், அரசியல் சாதுர்யமும் கொண்ட முத்து வீரப்பர் தனியாட்சி பெறும் எண்ணத்திற்கு வித்திட்டார். அவருக்குப் பின் அரியணை ஏறிய அவர் இளவல் திருமலை நாயக்கர் அண்ணனது கனவை நனவாக்கினார்.

## 7. திருமலை நாயக்கர் (கி.பி. 1623 - 1659)

மதுரை நாயக்க மரபின் மங்காப் புகழுக்கு உரியவர் திருமலை சவுரி நாயினு அய்யலுகாரு என்னும் பெயர் கொண்ட திருமலை நாயக்கர் ஆவார். மதுரை மாநகரை ஒரு கலைநகராய் மாற்றிய பெருமை இவருக்கே உரியது. கி.பி. 1584இல் பிறந்த இவர் தன் தமயன் முத்து வீரப்பருக்குப் பின் கி.பி. 1623இல் தனது 39ஆம் வயதில் அரசு கட்டில் ஏறினார். இவரது தமயனார் 1616இல் திருச்சிக்கு மாற்றிய தலைநகரை மதுரைக்கு மாற்றினார். இது நிகழ்ந்தது கி.பி. 1634இல் ஆகும். இதற்குப் பல காரணங்கள் இருப்பினும் மதுரை மீனாட்சி அம்மையின் பால் திருமலை கொண்ட அளப்பரிய பக்தியும் ஒரு காரணம் எனலாம்.

விசய நகரப் பேரரசு நலிவடைந்ததைத் தொடர்ந்து திருமலை மன்னர் தன்னைத் தனி உரிமை பெற்ற மன்னராக அறிவித்துக் கொண்டார். தனது கோட்டைகளைப்

பலப்படுத்தி படைகளின் எண்ணிக்கையை அதிகரித்தார். தனது ஆட்சியில் ஐந்து பெரும்போர்களைச் சந்திக்க வேண்டியவரானார். மைசூர் உடையார்களுடனும், திருவாங்கூர் மன்னருடனும், இராமநாதபுரம் சேதுபதி யுடனும் போரிட்டு தனது வலிமையை உறுதிப்படுத்தினார். மைசூராருடன் நடத்திய இரண்டாவது கட்டப் போர் மூக்கறுப்புப் போர் என வரலாற்று ஏடுகளில் பதிவாகி யுள்ளது. இத்தனைப் போர்களுக்கும் இவர்க்குத் துணை நின்றவன் இவனது படைத் தலைவன் இராமப்ப அய்யனும், திண்டுக்கல் பாளையக்காரர் அரங்கண்ண நாயக்கருமே. தளபதி இராமப்ப அய்யன் இன்றைய திருமங்லத்திற்குச் செல்லும் வழியில் உள்ள சதுர்வேதிமங்கலம் (கூத்தியார் குண்டு) என்னும் ஊரில் பிறந்தவர். இவரது வீரத்தைப் போற்றும் விதமாக இராம்ப்ப அய்யன் அம்மானை என்ற நாட்டுப்புறப் பாடலே எழுந்தது.

திருமலை மன்னர் இறைபக்தி மிக்கவர் என்பதால் திருக்கோயில்கள் பலவற்றிலும் அரிய திருப்பணிகள் பலவற்றைச் செய்துள்ளார். மீனாட்சி அம்மன் கோயிலில் கிளிக் கூண்டு மண்டபத்தைக் கட்டினார். சொக்கநாதர் மற்றும் மீனாட்சி சந்நிதிகளில் ஆறுகால்பீடத்தின் முன் செம்பாலான துவாரபால்கர், துவாரபாலகியர் சிலைகளை அமைத்தார். இவ்விரண்டு சந்நிதிகளிலும் பலிபீடமும், கொடிக்கம்பமும் அமைத்தார்.

மதுரைக் கோயிலை நன்கு புதுப்பித்ததோடு திருப்பரங்குன்றம், அழகர்கோயில், திருவல்லிபுத்தூர் ஆண்டாள் கோயில், திருவரங்கம் ஆகிய கோயில்களிலும் பல திருப்பணிகள் மேற்கொண்டார். கள்ளழகர் கோயில் தெற்குச் சுற்றில் இவரது உருவம் ஒரு தூணில் அமைந் துள்ளது. அழகர்கோயிலிலேயே தனியாக நாட்டிய மண்டபம் ஒன்றைக் கட்டியுள்ளார். அதில் அமைந்துள்ள அவரது முழு உருவச் சிலை அழகு வாய்ந்தது. திருவில்லிபுத்தூர் கோயிலின் சன்னதி முன்பாக குறடு ஒன்று கட்டி அதில் ஒரு தூணில் தனது உருவத்தையும்

வைத்து பொன் தகடு வேய்ந்தார். மீனாட்சி ஆலயத்தின் எதிரில் அமைந்துள்ள வனப்புமிகு வசந்த மண்டபம் புதுமண்டபம் என இன்றும் வழங்குகிறது. இந்த எழில் கூடத்தை உருவாக்கியவர் இவரே. இதில் இவர் தனக்கு முன்னிருந்த நாயக்க அரசர்களின் உருவங்களையும் தனது உருவத்தையும் அமைத்துள்ளது வரலாற்றுச் சிறப்புடைய ஒன்றாகும்.

மீனாட்சி அம்மன் கோயிலின் இன்றைய கிழக்கு (அம்மன் சன்னதி) நுழைவாயில் இவரது மனைவியர் தோணியம்மை, ருத்ரா ஆகியோரால் கட்டப்பட்டது. அட்டசக்தி மண்டபம் என்று இது பெயர் பெற்றுள்ளது. மதுரை நகரின் மகுடமாய் ஒளிரும் திருமலை மன்னர் அரண்மனையைத் திட்டமிட்டுக் கட்டியவர் இவரே. இத்தாலியக் கட்டடக் கலை வல்லுநரின் ஆலோசனைப்படி இந்திய இஸ்லாமிய, கிரேக்க கலைகளின் கலவையாக இதனை அமைத்தார். இம்மாளிகை உருவாக மண் எடுத்த இடமே இன்றைய வண்டியூர் தெப்பக்குளம் என்பர். அதிலும் எழில் வாய்ந்த மைய மண்டபம் கட்டித் தன் பிறந்த நட்சத்திரமான தைப்பூசத்தன்று சுந்தரேசுவரரின் தெப்பத் திருவிழாவை நடத்த ஏற்பாடு செய்தார்.

முக்குறுணி விநாயகர் என்னும் பெயரில் மிகப் பெரிய விநாயகர் சிற்பத்தை மதுரைக் கோயிலில் அமைத்து அதைத் தாம் தினமும் வழிபடும் வகையில் தன் உருவம் பொறித்த செப்புத் திருவாச்சியையும் அமைத்தார். இவரது உருவச் சிலைகளில் இவரும் இவரது இரு மனைவியரும் எதிரில் இவரது தம்பியும் குடும்பத்தினரும் நிற்பதாகவே வடித்துள்ளார்.

திருமலை மன்னர் அனைத்து மக்களின் அன்பையும் ஆதரவையும் பெற்றவர். இன்று மிக அதிக எண்ணிக்கையில் வாழும் சௌராட்டிர இன மக்களைக் குடியமர்த்தி நெச்வுத் தொழிலை வளர்த்தவர். தான் மீனாட்சியின் பிரதிநிதியாகவே மதுரை மண்ணை ஆளுவதாக எண்ணி

வருடம் தோறும் அம்மன் கையால் செங்கோல் பெற்றார். தேனூர் வைகைக் கரையில் தீர்த்தமாடச் செல்லும் கள்ளழகர் திருவிழாவை மதுரை வைகைக் கரையில் தீர்த்தமாடும் திருவிழாவாக மாற்றினார். மீனாட்சி அம்மன் கோயிலுக்குத் தேர்கள் செய்து கொடுத்து தேர்த்திரு விழாவும் அதேசமயம் நிகழச் செய்தார். இப்படி மதுரை நாயக்க மன்னர்களிலேயே மிகப் புகழ் பெற்று விளங்கிய திருமலை மன்னர் 1659இல் மறைந்தார்.

## 8. இரண்டாம் முத்து வீரப்பர்: (கி.பி. 1659)

திருமலை நாயக்கரின் மகனே இவர். சுமார் 4 மாதங்களே ஆட்சி செய்தவர். அரசுரிமைப் போரில் போட்டியாய் இருந்த தனது சிற்றப்பன் குமார முத்துவுக்கு சிவகாசி, நெல்லைப் பகுதிகளின் ஆட்சியைப் பிரித்துக் கொடுத்து அமைதி கண்டார். திருச்சிக் கோட்டையை மேலும் வலிமையுடையதாக்கி பீஜப்பூர் சுல்தானின் படை எடுப்பை வீரமாகச் சந்தித்து வெற்றி கண்டார். நான்குமாத ஆட்சியே எனினும் குறை ஒன்றும் இல்லாமல் கடந்தது.

## 9. சொக்கநாத நாயக்கர் (கி.பி. 1659-1682)

இவர் இரண்டாம் முத்து வீரப்பரின் புதல்வர். இவரது பட்டத்து அரசியே மாதரசி மங்கம்மாள். மதுரை வரலாற்றில் மிகவும் குழப்பமான சூழலில் ஆட்சியைப் பெற்றுத் திறம்பட ஆண்டவர். இவர் மீண்டும் மதுரை யிலிருந்து தலைநகரைத் திருச்சிக்கு மாற்றினார். அதுமுதல் நாயக்கர் கால இறுதி வரைத் திருச்சியே தலைநகரமாகத் திகழ்ந்தது. இவர் செய்த மாபெறும் தவறு திருமலை நாயக்கர் மகாலின் எழிலார்ந்த பல பகுதிகளை இடித்துத் திருச்சிக்குக் கொண்டு சென்று புதிய அரண்மனை கட்ட முயன்றதாகும். ஆனால் இம்முயற்சியும் நிறைவு பெறவில்லை. அரண்மனையின் பெரும்பகுதி அழிந்ததே உண்மை. இவரிடம் தளவாயாகச் செயல்பட்ட லிங்கம நாயக்கன் இவருக்கு எதிராகச் சதி செய்தான். அதையும் முறியடித்தார்.